# கல்கி

ஸ்பீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



'மிகாயீல்' ஜாக்ஸன்?

KALKI ● 14.12.2008 ● ரூ.10.00 ● 96 பக்கங்கள்



ிளஸ்ஸை
ினைச்சுப்
பாருங்க!



நரகமான
சென்னை!
- மேயர் பேட்டி

60

# 25,00,000
# விழிகளின்
# மகிழ்ச்சிக்
# கொண்டாட்டம்

இந்த மகிழ்ச்சிக் கொண்டாட்டத்திற்கு 25,00,000 காரணங்கள்

இந்தியாவின் ஈடுஇணையற்ற முதலிடம்
வாசன் கண் மருத்துவமனை

28க்கும் மேலான மருத்துவமனைகள்
200க்கும் மேலான கண் மருத்துவ நிபுணர்கள் மற்றும்
2500க்கும் மேலான மருத்துவ பணியாளர்கள்

**12.5 லட்சம் மக்களின் நம்பிக்கை**
இந்த கொண்டாட்டத்தில் நீங்களும் பங்கு பெறுங்கள்

**எங்களது அனைத்து மருத்துவமனைகளிலும்**
***கட்டணமின்றி கண் பரிசோதனை மற்றும் ஆலோசனை**

உங்கள் சேவைக்காகவே... எப்பொழுதும் உங்கள் அருகில்

**Chennai:**
**Saidapet :** 120-A,Bazaar road.
**Chromepet :** 286, GST Road.
**Annanagar :** M-77, 3-Avenue, Annanagar East.
**Madipakkam :** 683/5,Mahalingam street.
**Tiruvanmiyur :** 72,L.B.Road.
**Perambur :** 286/149, Papermills Road.
**Vadapalani :** 154/2, Arcot Road.
**Call Centre No: 044 - 43400000**



vasan eye care
Hospital
ENHANCING VISION

The Vasan Eye Care Hospital Network:
TRICHY | SALEM | ERODE | DHARMAPURI | MADURAI | TUTICORIN | KUMBAKONAM | TANJORE | COCHIN
CALICUT | TRIVANDRUM | KANNUR | KOTTAYAM | DHARWAD | BELGAUM | HUBLI | TIRUPATI | NELLORE
Opening soon at: THRISSUR | PALAKKAD | KOLLAM | COIMBATORE | TIRUNELVELI |
HOSUR | BANGALORE | MANGALORE | MYSORE | VIJAYAWADA | HYDERABAD
www.vasaneyecare.org

# சினி சிப்ஸ்

✱ 'பொய் சொல்லப் போறோம்' படத்தின் இயக்குநர் விஜய்யின் அடுத்த படம் 'மதராஸ் பட்டினம்.' கதை இயக்குநருடையது. ஆர்யா ஹீரோவாக நடிக்கும் இப்படத்தின் திரைக்கதைப் பகுதியை, அந்தமானில் ஆறு நாட்களில் முடித்துவிட்டுத் திரும்பியுள்ளனர், எழுத்தாளர்கள் பிர பஞ்சனும் அஜயன்பாலாவும்.

✱ கோலிவுட் வட்டாரத்தில் படத் தின் பெயருக்குத்தான் பஞ்சாயத்து நடக்கும். ஆனால், இப்போது இயக்கு நரின் பெயருக்கே பஞ்சாயத்து நடக் கிறது. தெனாவட்டு படத்தின் இயக் குநர் P.V.கதிர், தன் பெயரை மாற்றிக் கொள்ள வேண்டுமென்று பாரதிராஜா மூலம் தூது விட்டாராம், காதல் வைரஸ் படத்தின் இயக்குநர் கதிர். 'ஏற்கனவே கதிர் என்ற பெயரில் நான் எஸ் டாப்ளிஷ் ஆகியிருக்கும்போது அதே பெயரில் இன்னொரு இயக்குநர் என்ட்ரி ஆவது சரியில்லை' என்று ஃபீல் பண்ணுகிறாராம். ஆனால், தெனாவட்டு இயக்குநரோ அம்மா அப்பா வைத்த பெயரை மாற்ற முடியாது என தெனாவட்டு காட்டு கிறாராம்.

✱ 'வாரணம் ஆயிரம்', 'சேவல்' படங்களுக்குப் பிறகு மீண்டும் ஹீரோ யினாக நடிக்கும் ஆசை சிம்ரனுக்கு வந்துவிட்டதாம். தயாரிப்பாளர் யாரும் முன்வராத பட்சத்தில் தன் சொந்தப் பண்ணத்திலேயே ஹீரோயினாக வேஷம் கட்ட முடிவெடுத்திருக்கிறாராம்.

- நியூஸ் பாய்



பிரிக்கவே முடியாதது ஃபீமேலும் ஃபேஷனும்! பதினைந்து வயதிலிருந்து அறுபது வயது வரை பெண்களுக்கு மிகவும் பிடித்த சொல்லே ஃபேஷன்தான். லேட்டஸ்ட் ட்ரெண்ட் என்ன, ஸ்டைல் என்ன, கலர்கள் என்னென்ன... என்று ஃபேஷன் பட்டியல் நீளும்.

2009ல் டீன் ஏஜ் பெண்களுக்கான ஃபேஷன் ட்ரெண்ட் என்னவாக இருக்கும் என ஃபேஷன் ஜோசியர்கள் கணித்திருப்பதைப் படியுங்க.

★ 2009ல் பாப்புலர் கலராக இருக்கப் போவது ப்ளூ! நீல ஜீன்ஸ், நீல ஸ்கர்ட், நீல டீ-ஷர்ட்ஸ்... என ஒரே ப்ளூ மயமாக இருக்கப் போகிறது.

★ ஃப்ளோரல் ப்ரிண்ட் என சொல்லப்படும் பூப்போட்ட டிஸைன்கள் திரும்பவும் மார்க்கெட்டில் படையெடுக்குமாம். பூப்போட்ட ட்ரஸ்ஸுடன் கவர்ச்சியான காலணிகள் மற்றும் ஆக்ஸஸரீஸ் சரியான படி தேர்வு செஞ்சு போட்டுக்குங்க கண்ணுகளா...

★ மல்டி கலரில் 'மாக்ஸி ட்ரஸ்' என்று ஒன்று உருவாக்கப்பட்டு இளம்பெண்கள் அந்த உடையில் நகர்வலம் வந்து த்வம்சம் செய்யும் அறிகுறிகள் தெரிகின்றனவாம். இந்த மாக்ஸி ட்ரஸ்ஸில் ரகளையாக ஜ்யோமெட்ரிக் பாட்டர்ன் இருந்தால், அசத்தப் போவது யாரு? கலக்கப் போவது யாரு?ன்னு கேள்வியே கிடையாது.

★ பார்ட்டிவேர் ட்ரஸ்ஸில் 'ஒன்-ஷோல்டர்' ட்ரஸ்தான் ஹிட்டாக இருக்கப் போகிறதாம். ஒரு பக்கத் தோள் வெறுமையாகத் தெரியும். அப்பா - அம்மா பர்மிஷன் கிடைப்பது கொஞ்சம் கஷ்டம் எனத் தெரிகிறது. (இருந்தாலும் அப்பா-அம்மா சொல்றதையெல்லாம் இந்த வயசில யாராச்சும் கேட்டிருக்காங்களா...?)

★ டெனிம் பாண்ட் என்றுமே மெகா ஸ்டார் அந்தஸ்துள்ள பாண்ட். ஸ்லிம் பாண்ட் புழக்கத்தில் வரலாம் எனத் தெரிகிறது.

★ கேப்ரீஸ் எனும் முக்கால் பாண்ட்





செம ஹாட்! இத்துடன் ஸ்டைலிஷ் டீ ஷர்ட் போட்டுக்கிட்டா அம்சவேணி நீங்கதான்!

★ காலணிகளில் ஃப்ளாட் ஷூஸ்தான் பாப்புலராகப் போகின்றன. ஸ்ட்ராப்பி, பாட்டர்ன் செருப்புகளும் டீன்ஏஜ் அம்மணிகளின் கால்களில் கிடந்து கர்வம் கொள்ளப்போகின்றனவாம்.

★ சன் ஸ்க்ரீன் அப்ளை செய்யாமல் வெளியில போகாதீங்க. செல்லை விடலாம்; ஹேண்ட்பாக் இல்லாமல் போகலாம்; ஆனா சன் ஸ்க்ரீன் போடாமல் போனால் டேஞ்சர்.... சருமத்துக்கு!

★ சன் க்ளாஸ், ஷேட்ஸ் எனப்படும் கூலிங் கிளாஸ் டீன் ஏஜ் பெண்களின் ஃபேவரிட் ஆக்ஸஸரீஸ்! ஸ்டைல் மங்கை என எக்ஸ்ட்ராவாக அறியப்படுவீர்கள்.

அவரவர் ராசிக்குரிய கலர்கள் இதோ - போட்டுக்குங்க, பாப்புலரா ஆகுங்க!

மேஷம் - சிவப்பு
ரிஷபம் - லைட் ப்ளூ, பேஸ்டல் ஷேட்ஸ்
மிதுனம் - ஸ்லேட் ப்ளூ, எலுமிச்சை யெல்லோ
கடகம்- சில்வர், பச்சை
சிம்மம் - ஆரஞ்சு, கோல்ட்
கன்னி - ஆழ்ந்த நீலம்
துலாம் - சாஃப்ட் பிங்க், நிலம்
விருச்சிகம் - டீப் யெல்லோ, பிரைட் சிவப்பு
தனுசு - ஆழ்ந்த நீலம்
மகரம் - கறுப்பு, பிரௌன், டார்க் க்ரீன்
கும்பம் - எலக்ட்ரிக் ப்ளூ, பச்சை, டல் யெல்லோ
மீனம் - ஸீ க்ரீன் (கடற்பச்சை), சில்வர்

**- லதா சேகர்**




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: **சீதா ரவி**
உதவி ஆசிரியர்: **கதிர்பாரதி**
வடிவமைப்பு:
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன், பா.கோபால்**

தொலைபேசி:
044 - 4343 8888 (30 lines)
தொலைநகல்: 044 - 4343 8899
மின்னஞ்சல் - ஆசிரியர் குழு:
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு:
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு:
subscription@kalkiweekly.com
பிற தகவல்கள்:
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி:
www.kalkionline.com
சந்தா விவரம் - உள்நாடு:
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-
வெளிநாடு (விமானத்தபால்):
ஒரு வருடம் : ரூ. 3,800/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

**ஆறாவது சம்பளக் கமிஷனுக்குப் பிறகு பை நிறைய சம்பளம்; அதிகாரம், பதவிக்கே உரிய சௌகரியங்கள் அவ்வளவையும் தூக்கிப் போட்டுவிட்டு அரசியலில் குதித்திருக்கிறார் சிவகாமி ஐ.ஏ.எஸ். அவருடன் ஒரு சந்திப்பு :**

# திருமாவுக்குப் போட்டியா?

**வாயில் நுழையுமா பகுஜன் சமாஜ்**

திராவிட முன்னேற்றக் கழகமென்றோ, அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகமென்றோ முழு பெயரைச் சொல்லியா அழைக்கிறீர்கள்? இல்லையே! தி.மு.க.-அ.தி.மு.க., என்றுதானே அழைக்கிறீர்கள். அதுபோல பி.எஸ்.பி. என்று சுருக்கமாகச் சொல்ல முடியுமே!

**மாயாவதி எப்படிக் கவர்ந்தார்?**

ஆசிரியராக வாழ்க்கையைத் துவங்கிய மாயாவதி, ஆணாதிக்கம் மிகுந்த அரசியலில், தமது கடின உழைப்பாலும் விடா முயற்சியாலும் முன்னணிக்கு வந்திருக்கிறார். அவரைப் போல இந்திய அரசியலில் ஓர் இரும்புப் பெண்மணியைக் காண்பது அரிது. கிட்டத்தட்ட தென்னகத்தில் ஜெயலலிதாவை அவரோடு ஒப்பிடலாம். எனவே, என்னைக் கவர்கிறார்.

**ஏன் பகுஜன் சமாஜ் கட்சி?**

எந்தப் பொறுப்பையும் எதிர்பார்த்து பி.எஸ்.பி.யில் சேரவில்லை. ஆனால் திறமையை அங்கீகரிக்கும் மனப்பக்குவம், மாயாவதிக்கு உண்டு. மேலும், எந்த இயக்கத்தில் நான் பணிபுரிந்தாலும் எனக்கென ஒரு சுதந்திரத்தை - அதற்கான தளத்தை உருவாக்கிக் கொள்வேன்.

**மாயாவதி சர்வாதிகாரியல்லவா?**

இவ்வளவு பெரிய கட்சியை நடத்துவதற்குக் கட்டுக்கோப்பும் ஒழுங்கும் அவசியம் தேவை. அதை அமல்படுத்துவதற்கு, திறமை வாய்ந்த தலைமை தேவை. அந்த அடிப்படையில் மாயாவதி தலைவராகப் பளிச்சிடுகிறார். இதைச் சர்வாதிகாரம் என்று சொல்வது அபத்தம்!

**தமது சிலையை, தாமே திறப்பதா?**

ஒரு நினைவாலயத்தில் மாயாவதியின் சிலை நிறுவப்பட்டிருக்கிறது. இந்தச் சிலை திறப்பு என்பது மாயாவதியைப் பொறுத்தமட்டில் ஒரு நேர்மையான விஷயம் என்றே நினைக்கிறேன். இதில் எந்த அருவருப்பும் இல்லை.

**பிரிந்துகிடக்கும் தலித் இயக்கங்கள்?**

அம்பேத்கார் நூற்றாண்டு விழாவுக்குப் பிறகு இந்தியாவில் ஆங்காங்கே உள்ளூர் அளவில் பல தலித் இயக்கங்கள் தோன்றியிருக்கின்றன. தமிழ்நாட்டில், தெற்கே கிருஷ்ணசாமியும் வடக்கே திருமாவளவனும் இந்த இயக்கங்களின் சார்பாக முன்னணிக்கு வந்திருக்கிறார்கள். தலித் இயக்கங்களின் வளர்ச்சி என்பது ஒரு மண்டிய, கட்டுக்கோப்பற்றது (wild growth). இருந்தாலும், காலப்போக்கில் பண்படுத்தப்பட்டு ஒழுங்குமுறைக்குள்ளும் ஒன்றுபட்ட தலைமையின் கீழும் வரும் என்பது என் எதிர்பார்ப்பு. விரைவில் அது

நடக்கும்!''

**திருமாவளவனுக்குப் போட்டியா?**

அவரவர், அவரவர் தளத்தில் சமுதாய நலனுக்காக வேலை செய்துகொண்டிருக்கிறோம். இதில் யாரும் யாருக்கும் போட்டி அல்ல.

**பிராமணர்கள் பி.எஸ்.பி.க்கு நண்பர்களா?**

பிராமணர்களையும் பி.எஸ்.பி.யில் இணைத்துக்கொண்டு வெற்றிகரமாக ஆட்சியைப் பிடித்த மாயாவதியைப் பார்த்துச் சிலர் கண்டனமும் கேலியும் செய்கிறார்கள். ஆனால், பி.எஸ்.பி. பார்ப்பனர்களுக்கு எதிரி அல்ல. அது பார்ப்பனியத்துக்கு மட்டுமே எதிரி. பிராமணர்கள் பி.எஸ்.பி.யின் கொள்கையை ஏற்று அதில் இணைவது என்பது மனமாற்றத்தைக் காட்டுவதோடு சமூக மாற்றத்துக்கான அறிகுறியாகவும் தெரியவில்லையா?

**பி.ஜே.பியுடன் கூட்டா?**

பி.எஸ்.பி. இதுவரை தேர்தலில் யாருடனும் கூட்டு வைத்துக் கொண்டு போட்டியிட்டதில்லை. தேர்தல் முடிந்த பிறகு ஆட்சி அமைப்பில் மட்டும்தான் நாங்கள் பி.ஜே.பி.யோடு உறவுகொண்டிருக்கிறோம். அது தேவையின் அடிப்படையில் உருவான கூட்டணி. தனித்தே போட்டியிடும் அளவுக்கு எங்களுக்கும் தன்னம்பிக்கை துணிச்சல் உண்டு!

**திராவிட இயக்கங்கள் தலித்துகளுக்கு ஒன்றும் செய்யவில்லையா?**

திராவிட இயக்கங்கள் மீதுள்ள குற்றச்சாட்டே இதுதான். அவர்கள் தலித்துகளுக்கு எதுவும் செய்யவில்லை. குறிப்பாக, ஜாதி ஒழிப்பில் திராவிட இயக்கங்கள் சாதித்தது என்ன? இவர்களது ஆளுகையின் கீழ் தான் தமிழ்நாட்டில் ஜாதி சங்கங்கள் அதிகமாகி இருக்கின்றன.

**அரசியல் ஏன்?**

அறைக்குள் உட்கார்ந்துகொண்டு புத்தகம் படித்துவிட்டு புத்தகம் எழுதுவது இலக்கியம் அல்ல. களத்தில் குதிக்க வேண்டும். பல்வேறு அனுபவங்களை உணர வேண்டும். சமூக மாற்றத்துக்கான நமது பங்களிப்பைச் செலுத்தவேண்டும். இதுவரை கட்சி சார்பில்லாமல் சிறு சிறு இயக்கங்கள் மூலமாக செய்துவந்த பணியை இப்போது அரசியலில் குதித்துச் செய்யத் துவங்கியிருக்கிறேன்.

- **ப்ரியன்**

படம் : **செந்தில்**



—சிவகாமி IAS பேட்டி

# பவுடரால் பரவுமா புற்றுநோய்?

பொதுவாக டால்கம் பவுடரின் தேவை அல்லது செயல்பாடு என்னவாக இருக்கும்? பவுடரைப் பயன்படுத்துபவருக்கு, அது புத்துணர்வைக் கொடுக்கலாம்; வியர்வை நாற்றத்தைப் போக்கலாம்; அவரைச் சுற்றி சுகந்தம் பரப்பலாம். கூடவே, ''புற்றுநோயையும் உண்டாக்கலாம்'' என்கிறது ஒரு மருத்துவ நிறுவனம் வெளியிட்ட கையேடு. பெண்கள், ஈரம் நீக்குவதற்காகவும் உலர் உணர்வுக்காகவும், பாலுறுப்புகளிலோ சானிடரி நாப்கின்களிலோ டால்கம் பவுடரை பயன்படுத்தும்போது, அது பாலுறுப்பின் வழியாக கர்ப்பப்பையை அடைந்து புற்றுநோயை உண்டாக்கலாம் என்கிறது அந்த மருத்துவக் கையேடு. உண்மை என்ன? அறிந்துகொள்ள வளசரவாக்கம் ஏ.என்.என். மருத்துவமனையின் மகப்பேறு மருத்துவ நிபுணர் சித்ரா சுந்தரராஜனிடம் பேசினோம்...

''ஆண்களுக்கு வரக்கூடிய அத்தனை வகையான புற்றுநோய்களும் பெண்களுக்கும் வரக்கூடியதுதான் என்றாலும், பெண்களுக்கென பிரத்யேகமாக, மார்பகம், பாலுறுப்பு, கர்ப்பப்பை போன்றவற்றில் புற்றுநோய்கள் வருகின்றன. மார்பகப் புற்றுநோய் பெரும்பாலும் மரபு வழியாகக் கடத்தப்படுகிறது. அம்மாவுக்கு மார்பகப் புற்றுநோய் இருந்தால் அவருக்குப் பிறந்த பெண் குழந்தைக்கும் இந்தப் புற்றுநோய் வர வாய்ப்புகள் அதிகம். இப்படி மரபு வழியாகத் தொடரும் இந்தப் புற்றுநோய் பாதிப்பை மருத்துவத்தில் கேன்சர் ஃபேமிலி சிண்ட்ரோம் என்றழைப்போம். இந்த மாதிரி குடும்பப் பின்னணி கொண்ட பெண்கள், வருடத்துக்கு ஒருமுறையேனும் மருத்துவரின் ஆலோசனையைப் பெறுவது நல்லது. அந்த மருத்துவக் கையேடு சொல்வது போல பெண்கள், பாலுறுப்பில் டால்கம் பவுடரை பயன்படுத்தும்போது அது கர்ப்பப் பைக்குள்ளும் மற்றும் பெலோபியன் ட்யூப் வழியாகவும் சென்று, அங்கங்கு சிறு சிறு கட்டிகளாகத் தேங்குகின்றது. இதனை லேப்ரோஸ்கோபி மூலமாகக் கண்டறிந்திருக்கிறார்கள். இந்தச் சிறு சிறு கட்டிகள் பின்னர் கேன்சர் கட்டிகளாக உருமாறவும் வாய்ப்பு உண்டு. ஆனால் வாய்ப்பின் சதவிகிதம் மிக மிகக் குறைவு'' என்றவர், இதுபோல் அந்தரங்க உறுப்புகளில் பவுடர் பயன்படுத்தாமல் உலர்வாக, சுத்தமாக வைத்துக்கொள்வதன் முக்கியத்துவத்தையும் வலியுறுத்தினார்.

''தெற்காசியாவில், ஒரு மணி நேரத்துக்கு பத்துப் பெண்கள் கர்ப்பப்பை புற்றுநோயால் பாதிக்கப்படுகின்றனர். இதில் இந்தியப் பெண்கள் எட்டுப் பேர் என்பது பெருத்த சோகம். கர்ப்பப்பை வாயில்



பார்த்தால் புற்றுநோய்க்கான அறிகுறி உள்ளதா என்று தெரிந்துகொள்ளலாம்'' என்கிறார் டாக்டர் சித்ரா சுந்தரராஜன்.

''அநிதமான ரத்தப் போக்கு, மிகுதியான வெள்ளைப்படுதல், பாலுறுப்பில் துர்நாற்றம் போன்றவை... இதன் கடைசி கட்டம். எனவே, குறைந்தது வருடத்துக்கு ஒருமுறையாவது குடும்பப் பெண்கள் பேப் ஸ்மியர் செய்து கொள்வது நலம். மேலும் பாலுறவில் ஈடுபடும் பெண்கள் HPV தடுப்பு மருந்துகளை (vaccine) எடுத்துக் கொள்வதன் மூலம் இந்நோயை ஆரம்ப நிலையிலேயே தடுக்கலாம்'' என்றவர், இந்த நோய் வராமல் இருப்பதற்கான விழிப்புணர்வு குறித்தும் பேசினார்.


டாக்டர் சித்ரா

ஏற்படக்கூடிய புற்றுநோய்க்கு மிக முக்கியமான காரணம் (99.7%) ஹியூமன் பாபிலோமா வைரஸ்தான். இந்த ஹெச்.பி.வி., பெரும்பாலும் பாலுறவில் ஈடுபடும் பெண்களைத்தான் அதிக அளவில் பாதிக்கிறது. இந்தப் புற்றுநோய் கர்ப்பப்பையின் வெளியுறை, உள்சுற்று, பெலோபியன் ட்யூப், ஓவரி, பாலுறுப்பின் வெளிப்புறம்... ஆகியவற்றில் உண்டாகலாம். சிறு வயதிலேயே (21 வயதுக்கு முன்பு) பாலுறவில் ஈடுபடுவதும், முறையற்ற பாலுறவு கொள்வதும் இந்த ஹெச்.பி. வைரஸ் தொற்றுவதற்குக் காரணம். இது ஆண்களின் மூலமாகத்தான் பெண்களுக்குப் பரவுகிறதென்றாலும், ஆண்களை இது பாதிப்பதில்லை. நூறு வகையான ஹெச்.பி. வைரஸ்களில் ஐந்து வகையானவை மட்டுமே புற்றுநோயை உண்டாக்கக்கூடியவை. இதை ஆரம்ப நிலையிலேயே கண்டறிவதற்கு pap smear பரிசோதனை உள்ளது.

கர்ப்பப்பை வாயில் உண்டான செல்களைச் கரண்டி, மைக்ரோஸ்கோப்பில்

''பெண்கள் மத்தியில் புற்றுநோய் குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும். அடிக்கடி எக்ஸ்ரே எடுத்துக்கொள்ளக் கூடாது. கலர் டை பயன்பாட்டைத் தவிர்த்தல், பூச்சிக்கொல்லி மருந்துகள் பயன்படுத்தப்பட்ட பயிர் வகையிலிருந்து விளைந்த தானியங்களை உட்கொள்வதைக் குறைத்தல், கெஃபின், காஃபி போன்றவற்றின் பயன்பாட்டிலிருந்து விடுதலை ஆவது, செல்ஃப் பிரஸ்ட் எக்ஸாமினேஷன் (CBE) செய்து கொள்வது, பாலுறவில் ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்பது போன்றவற்றைப் பின்பற்றினாலே புற்றுநோய் தாக்கத்திலிருந்து தொண்ணூறு சதவிகிதம் தப்பிக்கலாம்'' என்கிறார் டாக்டர் சித்ரா சுந்தரராஜன்.

**- மகிமைராஜன்**

'சுவாதி முத்யம்' தெலுங்குப் படத்தில் மட்டுமல்ல; இன்னும் எத்தனையோ படங்களில் நான் செய்த பல வித்தியாசமான பாத்திரங்கள் எனக்கு ரொம்பப் பிடிக்கும். அப்படி ஒன்றுதான் 'ஜீன்ஸ்' படத்தில் நான் செய்த ரோல்.

ஆனால், அது என்னவோ பாரதிராஜா சாருக்குப் பிடிக்கவில்லை. ''இது எவ்வளவு நெகட்டிவான ரோல் தெரியுமா? 'கிழக்கு சீமையிலே' படத்துல உனக்குன்னு ஒரு இமேஜை ஏற்படுத்தி வெச்சிருந்தேன். அதைப் போய் உடைச்சிட்டியே!'' என்று வருத்தப்பட்டார்.

உண்மையில் எப்படிப்பட்ட கதாபாத்திரமாக இருந்தாலும், அதில் நடித்து, அந்தப் பாத்திரமாகவே மாறிவிட வேண்டும் என்பதுதான் என்னுடைய விருப்பம். காமெடி, அழுகை இதிலெல்லாம்கூட நடித்துவிடலாம். ஆனால், 'ஜீன்ஸ்' படத்தில் இருந்தது, ஒரு சேலஞ்சிங்கான ரோல், ரொம்பக் கஷ்டம். அந்தக் காரணத்துக்காகவே அதில் நடிக்க நான் ஒப்புக்கொண்டேன்.

ஏதோ ஒரு சமயத்தில் முடிவு செய்தேன் இல்லையா? 'வித்தியாசமான பாத்திரங்களில் நடிக்க வேண்டும்' என்று. அது என் அடிமனத்தில் தங்கிவிட்டது. அதை நோக்கித்தான் நான் போய்க்கொண்டிருந்தேன்.

'சித்தி'யின் வெற்றி ஒரே இரவில் எனக்குக் கிடைத்துவிடவில்லை. அதற்காக நிறைய போராட்டங்களைச் சந்திக்க வேண்டியிருந்தது. அதற்கு நடிகர் நடிகைகள் எல்லோருமே என்னோடு ஒத்துழைத்தார்கள். அந்தச் சமயத்தில் எல்லோருக்குமே வெற்றி தேவையாக இருந்தது.

இன்னொரு பக்கம் என் கழுத்தை இறுக்கிப் பிடித்துக் கொண்டிருந்தது பணத் தேவை. சித்தி ஆரம்பித்து வெற்றிகரமாக சன் டீ.வி.யில் வந்து கொண்டிருந்தாலும் நிதி நிறுவனங்களோ, வங்கிகளோ எனக்குப் பண உதவி செய்யத் தயாராக இல்லை.

அந்தச் சமயத்தில் சென்னையில் நான் ஏறி, இறங்காத வங்கிகளே இல்லையென்று சொல்லலாம். வாரத்துக்கு நான்கு நாட்கள் ஷூட்டிங் நடந்தால், மூன்று நாட்கள் பணம் கேட்டு நடையாக நடப்பேன். கடைசியில் என் மேல் நம்பிக்கை வைத்து ஒரு பேங்க், பணம் கொடுக்க முன்வந்தபோதுதான் நிம்மதியாக மூச்சு விடக் கொஞ்சம் அவகாசம் கிடைத்தது.

சொந்தமாக ஷூட்டிங் என்பதால் பெரும்பாலும் வெளியூர் செல்வதைத் தவிர்த்தேன். ஷூட்டிங் முடிந்ததும் வீட்டுக்கு ஓடிவர முடிந்தது. 'ஒரு புரொடக்ஷன் ஹவுஸை ஆரம்பித்தாயிற்று. இனி

* ஏக்தா கபூர்





* தீபா வெங்கட்

# சக்சஸாகாத

மேல் சினிமாவைத் தவிர்த்து விடலாம்' என்று நான் நினைத்தாலும், என்னை விடுவதற்கு சினிமா தயாராக இல்லை. ஆஸ்கர் ஃபிலிம்ஸ் ரவிச்சந்திரன் ஒருநாள் வந்தார். 'ரோஜாக் கூட்டம்னு ஒரு படம் பண்றேன். அதுல ரொம்ப முக்கியமான ரோல். நீங்கதான் பண்ணணும்' என்றார். தவிர்க்க முடியவில்லை. அந்தச் சமயத்தில்தான் நான் எதிர்பார்க்காத இன்னொரு பிரச்னை வந்து சேர்ந்தது.






# ராதிகா

இயக்குநர் ராம்கோபால் வர்மா தெலுங்கில் 'ஒக்க பிரேம கதா' என்று ஒரு படம் எடுத்துக்கொண்டிருந்தார். ஹைதராபாத்தில் ஷூட்டிங். அதில் ஒரு நடனக் காட்சியில் நடித்தபோது காலில் அடிபட்டுவிட்டது.

என்னால் காலை அசைக்கக்கூட முடியவில்லை. வலி உயிரின் குரல் வளையைப் பிடிப்பதுபோல் இருந்தது. என்னை மருத்துவமனைக்குக் கொண்டு போனார்கள். என்னைப் பரிசோதித்த டாக்டர்கள் உடனே காலில் ஒரு ஆபரேஷன் செய்ய வேண்டும் என்று சொன்னார்கள். நான் திடுக்கிட்டுப் போனேன்

'வேண்டாம் சார். முதலில் வேறு உருப்படியான டெஸ்ட் எதையாவது செய்யுங்கள். குறைந்தபட்சம் ஸ்கேனாவது எடுத்துப் பாருங்கள்' என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். அங்கிருந்த சீஃப் டாக்டர் நான் சொன்னதைக் காதில் வாங்கிக்கொள்ளவே இல்லை. அவசர அவசரமாக ஆபரேஷன் செய்து முடித்து விட்டார்கள். காலில் பெரிய கட்டுப் போட்டார்கள். நான் சென்னைக்கு வந்தேன்.

எனக்கு என்னவோ மனசு ஆறவே இல்லை. வேறொரு மருத்துவமனையில் காட்டினால் பரவாயில்லை என்று தோன்றியது. சென்னையில் ஒரு மருத்துவமனைக்குப் போனேன். பரிசோதனைகளை எல்லாம் செய்து பார்த்த டாக்டர்கள், நடந்து முடிந்த ஆபரேஷன் தேவையே இல்லாத ஒன்று என்று சொன்னபோது அதிர்ந்து

# ஆபரேஷன்

போனேன். ஆனாலும் என் கால் சரியாக வில்லை. புதிதாக ஒரு காரணத்தைச் சொன்னார்கள்.

'கட்டு சரியாகப் போடவில்லை. அதனால் கால் சற்று நகர்ந்திருக்கிறது. ஒரு ஆபரேஷன் செய்து, ஒழுங்காக வைத்தால் சரியாகப் போய்விடும். ஆனால், உங்களால் வலியைத் தாங்க முடியுமா?' என்று கேட்டார்கள். நான் 'முடியும்' என்று சொல்லிவிட்டேன். மறுபடியும் ஆபரேஷன்.

'சித்தி' தந்த சந்தோஷம் ஒரு பக்கம் என்றாலும், என்னால் எந்த வேலையையும் பார்க்க முடியவில்லை. நான் நடிக்க வேண்டி வந்தபோது படுத்துக்கொண்டும் உட்கார்ந்துகொண்டும் நடித்தேன்.

இதுபோல ஒன்றிரண்டு பிரச்னை இல்லை; நிறைய. ஒருதடவை ஏதோ ஒரு சிகிச்சைக்காக ஹாஸ்பிடலில் ஊசி போடப் போக, முகத்தில் அலர்ஜி மாதிரி வந்துவிட்டது. முகத்தின் ஒரு பக்கம் மட்டும் வீங்கிவிட்டது. அதற்காக நடிக்காமல் இருக்கவும் முடியாது. என்ன செய்வது?

அப்போது 'சித்தி'யில் மருத்துவமனையில் குழந்தைகளை மாற்றி எடுத்துப் போகும் காட்சியை எடுத்துக் கொண்டிருந்தோம். நான் நடிக்க வேண்டிய காட்சிகளில் எல்லாம், என் முகத்தை ஒரு ஆங்கிளில் மட்டுமே படம் பிடித்தார்கள். இன்னொரு பக்கமுகம் தெரியாத மாதிரி பார்த்துக் கொண்டார்கள். ஒரு எபிசோட் முழுக்க நான் அப்படி நடித்திருப்பேன். அந்தச் சமயத்தில்தான் 'சித்தி'யில் தீபா வெங்கட் பாத்திரத்துக்கு முக்கியத்துவம் கொடுத்து, அதிகமான காட்சிகளை அவரை வைத்து எடுத்தோம்.

**ஒ**ரு கட்டத்தில் 'சித்தி' தொடரை முடித்துக் கொள்ளலாம் என்று தோன்றியது. அப்போதுதான் பிரபல ஹிந்தி தயாரிப்பாளர் ஏக்தா கபூர் என்னைப் பார்க்க வந்தார்.

''என்னங்க இது! நல்ல டி.ஆர்.பி. ரேட்டிங்ல சித்தி போய்க்கிட்டு இருக்கு. இந்தச் சமயத்துல போய் இதை நிறுத்தறேன்னு சொல்றீங்களே?'' என்றார்.

''போதும்னு தோணுது. அதான்'' என்றேன். அதற்குப் பிறகு அவர் இன்னொரு யோசனையை முன் வைத்தார். ''பேசாம பாம்பே வந்துடுங்க. சித்தியை ஹிந்தியில எடுக்கலாம். ரெண்டு பேரும் கூட்டா தயாரிக்கலாம்'' என்றார்.

எனக்கு பம்பாய் பற்றித் தெரியும். ஹிந்தியில் மூன்று சூப்பர் ஹிட் படங்களில் நடித்தவள் நான். ரிஷி கபூருக்கு ஜோடியாக 'நதீப் அப்னா அப்னா' என்ற படத்திலும், அமிதாப்போடு ஒரு படத்திலும், இயக்குநர் எஸ்.ஏ. சந்திரசேகர் 'நீதிக்கு தண்டனை' படத்தை ஹிந்தியில் எடுத்தபோது அதிலும் நடித்திருக்கிறேன்.

ஆனாலும், 'வேண்டாம்' என்றேன். ஏன்?

**(ரயில் வரும்)**

எழுத்தாக்கம் : **பாலு சத்யா**

படங்கள் : **ஸ்ரீஹரி**



**'கிழக்குச்சீமையிலே' படத்துல உனக்குன்னு ஒரு இமேஜை ஏற்படுத்தி வெச்சிருந்தேன். அதைப் போய் உடைச்சிட்டியே!**







CINTHOL
CINTHOL

# எல்லாம் அவன் செயல்

ஆயிரம் குற்றவாளிகள் தப்பிக்கலாம். ஆனால், ஒரு நிரபராதி தண்டிக்கப்படக்கூடாது என்ற 'பழைய மொந்தை'யில் நியாயத்துக்காக வாதாடும் வக்கீல்தான் குற்றவாளி என்ற 'புதிய கள்'. மலையாளத்தில் வெளியான 'சிந்தாமணி கொலை கேஸ்' தமிழுக்கு ஏற்றவகையில் மாற்றப்பட்டு மனத்தை வசீகரிக்கிறது.

கிரிமினல்களை விடுவிக்கும் வழக்கறிஞராக வரும் நாயகன் ஆர்.கே., நீதிமன்றக் காட்சிகளில் நம்மை நிமிர வைக்கிறார். அவரது ஆக்ஷன் அவதாரமும் திக்திக்கென, திக்குமுக்காட வைக்கின்றது.

கல்லூரி ராக்கிங், சோதனைக்கூட கலாட்டா, பாமா கொலை, உடலைத் துண்டு துண்டாக வெட்டி ஏரியில் வீசுவதென முதல் பாதியில் 'நிஷா' புயலின் வேகம்.

நீதிமன்றக் காட்சிகளால் ஆக்கிரமிக்கப்பட்ட இரண்டாம் பாகத்தில் புத்திக்கு ஏகத்துக்கும் வேலை. அசந்தால் பார்வையாளர்தான் குற்றவாளியெனச் சொல்லி விடுவார்களோ என எகிறும் சஸ்பென்ஸ். அடுத்து என்ன அடுத்து என்ன என்று எதிர்பார்க்கவைத்து சிக்ஸர் அடித்திருக்கிறார் இயக்குநர் ஷாஜி கைலாஷ். குற்றவாளிகளை, வசனங்களால் பந்தாடும் ஆர்.கே.யின் ஆவேசத்தில் அவரது குரலும் தோற்றமும், நூற்றுக்கு நூறு கை கொடுக்கின்றன. குடும்பத்துக் குத்துவிளக்காக நாயகி பாமா. ராகிங்கில் மாட்டிக்கொண்டு முழிக்கும் போது பரிதாபத்தை அள்ளுகிறார். மனோஜ் கே.விஜயனும் ஆசிஷ் வித்யார்த்தியும்தான் குற்றவாளிகள் என அம்பலமாவது திடுக்கிட வைக்கும் திரைக்கதை. நிறைய ஃப்ளாஷ்பேக் காட்சிகளுக்கு கதை போய் வருவதால், எது உண்மை? எது பொய் என்ற தடுமாற்றம் பார்வையாளருக்கு ஏற்படுவதைத் தவிர்த்திருக்கலாம். கண்ணீரோடு கரையும் அப்பா செண்டிமெண்டுக்கு மணிவண்ணன், ஏகப் பொருத்தம்.

வண்டு முருகனாக ஐந்து குண்டு குண்டு காமெடிகளால் திரையில் கலகலப்பூட்டுகிறார் வடிவேலு. வித்யாசாகர் இசையில், பாடல்களில் ஈர்ப்பு இல்லை; பின்னணியில் புகுந்து விளையாடியிருக்கிறார். படத்தின் மிகப் பெரிய பலம் வசனம். 'அரசாங்கம் சாராயக் கடை நடத்துவதும், தனியார் பள்ளிக்கூடம் நடத்துவதும்தான் நாட்டுக்குப் பெருங்குழப்பம்' என்பது போன்ற வசனங்களில் தனித்துத் தெரிகிறார் வி. பிரபாகர்.

எல்லாம் அவன் செயல் - பார்க்கலாம்.

**- கண்மணி**



**திரைவிமர்சனம்**

கோயில் நகரமாம் "குடந்தை" மாநகரில்
ஆர்ப்பரித்து ஓடும் காவிரி நதிக்கரையில்
அமைய இருக்கும்

# "CAUVERY VIEW" Apartments

மக்களின் நன்மதிப்பை பெற்றுள்ள

**BEST**

நிறுவனத்தினரால் கட்டப்பட உள்ளது.



பூமி பூஜை 23-11-2008
அன்று காலை 11.00
மணியிலிருந்து 11.30க்குள்
சிறப்பாக நடைபெற்றது

| Flot No. | Sqft. | * Price. Rs. | Flot No. | Sqft. | *Price. Rs. |
|---|---|---|---|---|---|
| 1 1 BR. | 416 | 8,32,000/- | 9 1 BR. | 489 | 9,78,000/- |
| 2 2 BR. | 715 | 14,30,000/- | 10 2 BR. | 760 | 15,20,000/- |
| 3 2 BR. | 690 | 13,80,000/- | 11 2 BR. | 740 | 14,80,000/- |
| 4 1 BR. | 487 | 9,74,000/- | 12 1 BR. | 517 | 10,34,000/- |
| 5 1 BR. | 482 | 9,64,000/- | 13 1 BR. | 513 | 10,26,000/- |
| 6 2 BR. | 688 | 13,76,000/- | 14 2 BR. | 737 | 14,74,000/- |
| 7 2 BR. | 699 | 13,84,000/- | 15 2 BR. | 742 | 14,84,000/- |
| 8 1 BR. | 460 | 9,20,000/- | 16 1 BR. | 489 | 9,78,000/- |

மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்க

## BEST HOUSING

A Unit of Best Group of Companies

70/114, 5th Street, Padmanaba Nagar, Adyar, Chennai - 600 020.

S. Ramani 98400 71735 | R. Venkatachalam 98408 15931 | R. Devaraj 98408 55522

*Conditions Apply



# கல்கி




**2008 டிசம்பர் 14**

**ஸர்வதாரி கார்த்திகை 29**

**மலர் : 67**

**இதழ் : 20**


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## மும்பை உயிர்த்தியாகங்களை மலினப்படுத்தாதீர்!

உள்நாட்டு உளவுத்துறை எச்சரிக்கை செய்தபோதும் அமெரிக்க உளவுத்துறை இருமுறை எச்சரித்த பிறகும் அலட்சியமாக இருந்ததன் விளைவு, விலை மதிக்க முடியாத உயிர்ச் சேதம்.

பல்வகையில் பொருளாதார வளத்தை இழந்துள்ளதோடு, ஒரு நாட்டின் மன அமைதியையும் காவு கொடுத்து, அதன் எதிர்கால ஒன்றுபட்ட வாழ்வையும் கேள்விக்குறியாக்கியிருக்கிறது அரசின் அலட்சியப் போக்கு!

அச்சத்தை விதைத்து, சேதத்தை விளைவிப்பதுடன் நம் நாட்டின் சர்வமத ஒற்றுமையையும் குலைக்க வேண்டும் என்பதே பயங்கரவாதிகளின் நோக்கம்.

இதைப் புரிந்துகொண்டு முறியடிப்பதற்குப் பதிலாக, அலட்சியமாக இருந்து, பயங்கரவாதிகள் விரித்த வலையில் விழுந்துவிட்டது பொறுப்பற்ற அரசியல் தலைமை. அதன் செயல்திறன் இன்மைக்குத் தொடரும் சான்று, மஹாராஷ்டிரத்தில் தேஷ்முக்குக்குப் பதிலாக இன்னமும் வேறு ஒரு முதல்வரை அமர்த்த இயலாத கையாலாகாத்தனம்!

பயங்கரவாதத்தை மதப் பிரச்னையாக உருமாற்றுவதில்லை என்றும், கட்சி அரசியலுக்குப் பயன்படுத்துவதில்லை என்றும் உறுதி மேற்கொண்டால் மட்டுமே அப்பிரச்னைக்குத் தீர்வு பிறக்கும்.

அதோடு,

பாகிஸ்தானை நம்பி மோசம் போகாதிருக்க வேண்டும். அந்த நாட்டின் மீது அழுத்தம் கொடுத்து, அதன் பயங்கரவாத ஆதரவுக்கு முடிவு கட்ட, சர்வதேச ஆதரவு திரட்டுவது அவசியம்.




நமது உளவு அமைப்புகளின் திறனை மேம்படுத்தி, சர்வதேச அளவில் உள்ள உளவு அமைப்புகளிடையே தொடர்பு கொண்டு, தகவல்கள், எச்சரிக்கைகள் பெறுவது முக்கியம். அதைவிட முக்கியம், அவற்றின் பேரில் தகுந்த நடவடிக்கையை காலந்தவறாமல் எடுப்பதுடன், தொடர்ந்து கண்காணிப்பது. இதற்குச் சளைக்காத நிர்வாக அமைப்பை உருவாக்க வேண்டும்.

ஒளி - ஒலி மீடியா மூலம் மக்களை எச்சரித்து, பயங்கரவாத எதிர்ப்பில் ஈடுபடுத்துதல் அவசியம். அவர்களிடமிருந்து கிடைக்கும் தகவல்கள் அலட்சியம் செய்யப்படமாட்டா என்கிற நம்பிக்கையை ஊட்டி, பயங்கரவாதத்துக்கு அவர்கள் தெரிந்தோ தெரியாமலோ துணை போகாமல் காப்பது;

ஜாதி - மத பேதங்களைச் சாதகமாக்கிச் செய்யப்படும் அரசியல் பிரசாரங்களுக்குத் தடை விதிப்பது;

பயங்கரவாத குற்றங்களுக்கான விசாரணைகளை விரைவு நள நீதிமன்றங்களில் நடத்தி, தீர்ப்புகளை உடனுக்குடன் வழங்கச் செய்து தண்டனையை நிறைவேற்றுவது போன்ற சீர்திருத்தங்கள் இன்றியமையாதவை.

'இந்தியாவுக்குள் பயங்கரவாதத்தில் ஈடுபட்டால் அரசியல் தலைமை கண்டுகொள்ளாது; அதிகாரிகளை லஞ்சம் கொடுத்து மடக்கிவிடலாம். மக்களை ஜாலம் காட்டி ஏமாற்றிவிடலாம்' என்ற தற்போதைய நிலைமைதான் மும்பை பயங்கரவாத நிகழ்வுக்கு முக்கியக் காரணம். அந்த நிகழ்வை அனுமதித்த அரசு அமைப்பு, அதற்குப் பரிகாரம் செய்யவே முடியாது! ஆனால், எதிர்காலத்திலாவது இதுபோல் நிகழாமலிருக்க அரசியல் நோக்கைக் கைவிட்டுச் செயல்பட்டால், மும்பை வீர மரணங்கள் வீண் போனதாகாது.

புதிய உள்துறை அமைச்சர் ப.சிதம்பரத்தின் பொறுப்புகளுள் முதன்மையானது, பயங்கரவாத ஒழிப்பு முயற்சிகளிலிருந்து அரசியல் நோக்கையும் அரசியல் தலையீட்டையும் களைவதுதான். எதிர்க் கட்சியினரும் இதனை உணர்ந்து ஒத்துழைப்பு நல்குவது அத்தியாவசியமானது. இதையெல்லாம் செய்யத் தவறினால், மும்பையில் மரணமடைந்த கமாண்டோக்களின் உயிர்த் தியாகத்தை மலினப்படுத்தியதாகிவிடும்! ●



# எனது (மரு) மகள்கள்

'வைரத்துக்கு ருசி கிடையாது' என்ற கதையைப் போல ஆயிரத்துக்கும் மேற்பட்ட கதைகள் மாமியார் - மருமகள் சண்டைகளைப் பற்றிப் படிக்கும்போது என் உள்ளத்துள் வேதனை பொங்கும்! எனக்கு 1954ல் திருமணம். பெரியோர்கள் பார்த்துச் செய்த பதிவுத் திருமணம். இன்று என் வயது 67. என் மாமியாருக்குப் பதினொரு குழந்தைகள். திருமணமாகும் போது என் வயது 14. சமைக்கத் தெரியாது. செல்லமாக வளர்ந்தவள். என் மாமி (அத்தை) தனிக்குடித்தனம் வைக்கும் போது தனியாக சாமி மாடத்துடன் வீடு பார்த்திருந்தார். என் கணவர் கடவுள் மறுப்புக் கொள்கையில் இருந்தாலும் ஏற்றுக்கொண்டார். எனக்கு சமையல் செய்யத் தெரியாது என்பதால், நான் சமைப்பது எப்படியிருந்தாலும் அவர் சாப்பிட்டு விடுவார். ஆனால், எனக்குப் பிடிக்கவில்லை என்று சொன்னால் உடனே கிளப்பில் இருந்து உணவு வகைகளை வாங்கித் தருவார். ஒரு ஞாயிறன்று நான் சமைத்த அரிசிக் கூழையும் குழம்பையும் சுவைத்துப் பார்த்த அத்தை, உடன் கோழிக்கறியும் சோறும் சமைத்து வைத்ததுடன், மறுநாளே அவர் தங்கையை அழைத்து, இரு மாதம் என்னுடன் தங்கி சமைக்கும் கலையைக் கற்றுத் தரச் சொன்னார். இன்று எனக்கு மூன்று மருமகள்கள். அதில் ஒரு மருமகள் முஸ்லிம். நாங்கள் தனித் தனிக் குடும்பமாக இருந்தாலும் மிகுந்த ஒற்றுமையுடன் இருக்கிறோம். எங்களுக்குத் தேவையானவற்றை எல்லாம் அவர்கள் செய்கிறார்கள்.

இந்த நிலைமையில் இந்தக் கதையைப் படிக்கும்போது பத்திரிகைகள் மாமியாருக்கும் மருமகள்களுக்குமிடையே சண்டை மூட்ட இத்தகைய கதைகளை வெளியிடுகின்றனவா என சந்தேகம் எழுகின்றது. அதனால் மாமியார் மருமகள்கள் ஒற்றுமையாக இருக்கும் கருத்தில் உள்ள கதைகளை வெளியிட்டால் நன்று எனக் கருதுகிறேன்.

– தி. சரோஜா, சென்னை – 92

"தேர்தல் முடியறவரை மாமூல் தர மாட்டேன்னு சொல்றியே... ஏன்?"

"நிறைய கட்சிகளுக்கு நன்கொடைச் செலவு இருக்கு!"

– அம்பை தேவா



# மகேஷ், சரண்யா மற்றும் பலர்...

மற்றுமொரு சோகமான காதல் கதை. முடிந்த மட்டும் க்ளைமாக்ஸ் வரை ஜாலியாகக் கொண்டு செல்ல முயன்ற அறிமுக இயக்குநர் பி.வி. கதிருக்குப் பாராட்டு. கும்பகோணத்திலிருந்து படிப்புக்காக (என்ன படிப்பு?) சென்னை செல்லும் ஷக்தி ஜாடி என்றால், காதலியாக வந்து ஜாடிக்கு ஏற்ற மூடியாகிறார் சந்தியா. அந்த ஜாடியில் காதல் பூங்கொத்து வைத்து அழகாக்குகிறதா... மலர் வளையம் வைத்து சோகமாக்குகிறதா..? என்பது தான் க்ளைமாக்ஸ்.

ஹீரோவாக வரும் ஷக்தியின் நடிப்பில் தேவையான முதிர்ச்சி தெரிகிறது. சந்தியாவின் முகவரியைக் கண்டுபிடிக்க ரிஸப்ஷனிஸ்ட் கழுத்தில் கத்தி வைத்து மிரட்டுவது ஜாலி எக்ஸ்பிரஸ் என்றால், கொலைக் குற்றவாளியாக மாறுவது சோக சதாப்தி. சந்தியாவை 'சைட்' அடித்த அனுபவத்தை முதலில் தங்கை, அண்ணி, பிறகு அம்மா... என ஒவ்வொருவரிடமும் இன்ச் பை இன்ச்சாகச் சொல்வது தித்திப்பு.

இப்ப ஆக்ஸிடெண்ட் நடக்கும், இப்ப கல்யாணம் நிற்கும், இப்பப் பிரச்னை வரும் என... யூகிக்க முடிந்தாலும் சந்தியா கழுத்தில் வெட்டு விழப் போகிறது என்பது யூகிக்க முடியாத திரைக்கதை திருப்பம்.

நீண்ட நாட்களுக்குப் பிறகு நடிக்க வந்திருக்கும் சந்தியா அதே துருதுரு; அதே கலகல. கடைசியில் கழுத்தறுபடும்போது கவனத்தைத் தம் பக்கம் ஈர்க்கிறார். வீட்டோடு மாப்பிள்ளையைக் குத்திக்காட்டும் பெருசின் டயலாக்கில் ஏகத்துக்கு லொள்ளு.

ஆஸ்பத்திரி பில்டப், சரண்யா ஆக்ஸிடெண்ட் காட்சிகள் கத்திரியில் மாட்டியிருக்க வேண்டியவை. தப்பித்து வந்து நம் கண்களை உறுத்துகின்றன.

வித்யாசாகரின் இசையில் வித்தியாசமில்லை. கே. மோகன் குமாரின் ஒளிப்பதிவில் கும்பகோணம் ஓ.கே. சென்னை 'நோ' கே!

மகேஷ், சரண்யா மற்றும் பலர் - கீர்த்தியுண்டு நேர்த்தி இல்லை!

– கபிலன்

**ஜே.3** ஸ்டேஷன் லாக் அப்பிலிருந்து சாராய நெடி அடித்தது. அதையொட்டிய பக்கத்து அறையில் ஒரு பெஞ்சில் அமர வைத்திருந்தார்கள் அவர்களை. ராஜு களைத்திருந்தான். கீதா அந்த அறைக்குள் குறுக்கும் நெடுக்குமாக நடந்துகொண்டிருந்தாள். லாக்-அப்பின் கம்பிக் கதவு வழியே அவளைப் பார்க்கும்போதெல்லாம் அதனுள்ளிருந்து கை நீட்டி, ''நாஷ்டாக்குக் காசு கொடு, வவுத்தப் பசிக்குது'' என்று குழறினான் உள்ளேயிருந்தவன். கீதா அதைப் புறக்கணித்து நடந்தபடி இருந்தாள்.

நாற்பது வயது மதிக்கத்தக்க அந்த விசாரணைக் கைதியை மீண்டும் உற்றுப் பார்த்தான் ராஜு. கண்களில் போதை, உடலில் தள்ளாட்டம், வாயிலிருந்து அநாயாசமாக வெளிப்பட்ட கொச்சையான வசை மொழிகள். இத்தனை விகாரங்கள் ஒரு சேர ஒரே மனிதனிடம்

# புதிய வானம்

எப்படி குடிகொண்டன என்று ஆச்சரியப்பட்டான். சுய கௌரவத்தைத் தொலைத்துவிட்டு உழலும் ஒரு மனிதனைக் காட்டிலும் விகாரம் என்ன இருக்க முடியும்? சில நாட்களாகவே நிறைய விகாரங்களைப் பார்த்து வருவதாகத் தோன்றியது. அழகையும், ஆச்சர்யத்தையும் தேடத் தேட, இதோ இதோ என்று விகாரங்கள் வந்து கன்னத்தில் அறைகின்றன.

ஐ.ஜி. தனசேகர் கான்ஸ்டபிளை அனுப்பி, கீதாவுடன் அவனையும் ஜே.3 ஸ்டேஷனுக்குக் கொணர்ந்திருந்தார். ''இங்கேயே இருக்கட்டும்'' என்று இன்ஸ்பெக்டருக்கு உத்தரவு போட்டு விட்டு வெளியேறிவிட்டார்.

''எதுக்கு டிடெய்ன் பண்றீங்க?'' என்று கீதா கேட்டதற்கு, ''மேலிடத்து உத்தரவு. உங்க எதிரேதானே சொல்லிட்டுப் போனார்'' என்று சிரித்தார் இன்ஸ்பெக்டர்.

**வீ**ட்டு வாசலில் கீதாவுக்கு விடை கொடுத்தபோது ஃபோன் செய்த தனசேகர், அவர்களை வீட்டுக்குள்ளேயே



## சீதா ரவி

இருக்கும்படி அவசரமாக எச்சரித்தார். அப்பாவும் அம்மாவும் அடைந்த கலவரத்தைச் சமாளிப்பதற்குள் வாசலில் போலீஸ் ஜீப். அதில் ஏற்றி இங்கே கொண்டு தள்ளிவிட்டார்கள். செல்ஃபோன்களை வாங்கி வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அட்வகேட் நண்பர் மாதவனோடு வந்த அப்பாவைத் திருப்பி அனுப்பி விட்டார்கள். ''அவங்க பாதுகாப்புக்காகத்தான் இந்த ஏற்பாடு'' என்றதும், மாதவனும் எதிர்ப்பு சொல்லாமல் ஒதுங்கியிருந்தார்.

''செல்ஃபோனையாவது அவங்க கிட்டே கொடுத்து வைங்க. நாங்க விசாரிச்சுக்க சௌகரியமா இருக்கும்...'' என்றபோது இன்ஸ்பெக்டர் ''அதுக்கு அனுமதி இல்லை ஸார்'' என்று அழுத்தமாக மறுத்துவிட்டிருந்தார்.

'**சீ**தா மட்டும் இல்லாவிட்டால் இந்த நிகழ்வைத் தன்னால் எதிர்கொண்டிருக்க முடியுமா?' என்று



**சர்ப்ரைஸ் மினி தொடர் 5**

யோசித்தான் ராஜு. இப்போது வயிற்றின் ஒரு மூலையில் ஹிம்சித்துக்கொண்டிருக்கும் பயம், அவள் இல்லாது போயிருந்தால் அவனை ஆக்கிரமித்திருக்கும். மனிதர்கள் ஏன் குற்றவாளிகளாகிறார்கள்? ஏழைமையினாலா? பேராசையினாலா? சந்தர்ப்ப சூழ்நிலையினாலா? காரணம் எதுவாயினும் அவற்றிலிருந்து தப்பியது தனது பேரதிர்ஷ்டம் என்று தோன்றியது அவனுக்கு! லாக் அப்புக்குள்ளிருக்கும் நாற்பது வயது முரட்டு முகத்துக்கும் அதன் வெளியே பளபளவென்று ஷேவ் செய்து அமர்ந்திருந்த தனது இருபது வயது முகத்துக்கும் இடைவெளி, ஒரு மின்னல் கணம் மட்டுமே!

சீதாவை அழைத்தான் ராஜு.

''நாளைக்கு கமிட்டி மீட்டிங் இருக்கு. இன்னும் அரை மணி நேரமாச்சுனா ஹாஸ்டல்ல தேட ஆரம்பிப்பாங்க... இந்த தனசேகர் இப்படிப் பண்ணியிருக்க வேண்டாம்'' என்றான் கவலை தோய்ந்த முகத்துடன்.

அவன் அமர்ந்திருந்த பெஞ்சுக்கு மேலே, உயரத்தில் இருந்த சிறு வென்டிலேட்டர் வழியே, வானம் அந்தியில் சிவப்பது தெரிந்தது.

தினமும் அவன் பார்க்கும் வானம்தான். மொட்டை மாடியில் கயிறு கட்டுகிறபோது பளீரிடும் நீல வானம். அதிகாலை அவன் அறை ஜன்னல் வழியே முகமன் சொல்லும் வானம், மரங்களடர்ந்த பகுதியில் அவன் பறவைகளை அண்ணாந்து தேடுகையில் பச்சைத் திட்டுகளிடையே பதுங்கித் தெரியும் வானம். நதியின் முகத்

துவாரத்தையொட்டி, பஞ்சுப் பொதிகளுக்குக் குச்சிக்கால் முளைத்ததுபோல் நிற்கும் நாரைகளை ரசிக்கிறபோது, பின்னணியில் மூலைக்கடலை 'முத்தமிட்டே தழுவி முகிழ்க்கும்' வானம்...! நாற்றம் அடிக்கும் இந்த அறையின் ஓர் ஓரத்தில் பசி பொறுக்க மாட்டாமல் அமர்ந்திருக்கிறபோது, அதே வானம் எட்டாத தூரத்திலிருந்து ஏளனம் செய்கிறது! 'அழகென்னும் எல்லைக் கோட்டுக்குள் என்னைச் சிறைவைக்கப் பார்க்கிறே இல்லே நீ...' என்பது போல!

''என்ன ராஜு, கூப்பிட்டுட்டு ஏதோ மோட்டுவளையைப் பார்த்துக்கிட்டிருக்கே...?'' கீதாவின் குரலில் அனுதாபம், மிக இலேசாகத் தெரிந்தது. ''பசிக்குதா?''

கான்ஸ்டபிள் வாங்கித் தந்த பரோட்டா குருமாவை அவளால் சாப்பிட முடிந்தது ராஜுவுக்கு ஆச்சர்யம். அதன் காரமும் மாறுபட்ட சுவையும் அவனுக்கு ரசித்தாலும், சூழலின் அசுத்தமும் அவலமும் சாப்பிட முடியாமல் கஷ்டப்படுத்தின. இனம்புரியாத பயம் வேறு.

''பசிக்கலை'' என்றவன், ''உன்னால எப்படி இங்கே சாப்பிட முடிஞ்சது?'' என்றான் வியப்போடு.

''பழகிடுச்சு. இயக்கத்துல சேர்றதுக்கு முந்தியே அப்பாகூட கூட்டங்களுக்குப் போவேன். களப்பணிக்குப் போனாலும் அழைச்சுட்டுப் போவாரு. கிடைச்ச இடத்துல கிடைச்சதச் சாப்பிட்டுக்கணும். எல்லா தண்ணியும் குடிச்சு உடம்பு உரமாயிடுச்சு. உடம்பு மனசோட சேர்ந்து காரியத்துல லயிச்சுட்டா, தனியா எதையும் கேக்காது. ஈட் டு லிவ்; நாட் லிவ் டு ஈட்!''

சிறிய புன்னகை அவன் முகத்தில்.

''ஆனா உங்க அம்மா சமைக்கறதைப் பார்த்தா நீங்க எல்லாருமே சாப்பிடறதுக்குத்தான் உயிர் வாழற மாதிரி தெரியுது...''

''ஏன்! நீயும்தானே அந்தச் சாப்பாட்டை ஒரு கை பார்த்தே!''

''ஆமாம். ரசிச்சுதான் சாப்பிட்டேன். அதுக்காக எவ்வளவு நேரம் செலவிட்டிருப்பாங்கன்னு யோசிச்சாதான் தலை சுத்துது.''

திடீரென்று லாக்-அப்பிக்குள்ளிருந்து ஒரு பெரிய சப்தம் கேட்டது. 'தப் தப்' பென்று வயிற்றில் அடித்துக்கொண்டு அலறினான் அந்த விசாரணைக் கைதி. ''பசிக்குது! பசிக்குது! சோறு போடாம கொல்றீங்களேடா!'' என்றான் ஓங்கிய குரலில்.

கான்ஸ்டபிள் விரைந்து வந்து லத்தியால் லாக் அப் கம்பிகளின் மீது ஓங்கித் தட்டி, பொறுக்கியெடுத்த சொற்களால் அவனை அர்ச்சிக்க, ஒரு மூலையில் ஒடுங்கிச் சுருண்டான் அந்தக் கைதி.

ராஜுவின் தண்டுவடத்தில் ஓர் உதறல்



தோன்றி மறைந்தது.

''பயப்படாதே'' என்றாள் இதா, அவன் அருகில் அமர்ந்துகொண்டு. அந்த அண்மை தந்த பாதுகாப்புணர்வு அவனுக்கு வேண்டியிருந்தது.

எதிரே, வென்டிலேட்டர் வழியே தெரிந்த வானத் துளியைச்

**பஞ்சுப் பொதிகளுக்குக் குச்சிக்கால் முளைத்ததுபோல் நிற்கும் நாரைகளை ரசிக்கிறபோது, பின்னணியில் மூலைக்கடலை முத்தமிட்டே தழுவி முகிழ்க்கும் வானம்!**



சுட்டிக் காட்டினான். ''இங்கேயிருந்து பார்த்தா எல்லாமே வேற மாதிரி தெரியுது, இல்ல...?''

''ஆங்...?'' சற்று புரியாமல் அவனைப் பார்த்தாள். அவன் முகத்தைக் கூர்ந்து கவனிக்க, சமீபத்திய அதிர்ச்சிகளின் ரேகைகள் படிந்திருப்பது தெரிந்தது. இருவரது கண்களும் சந்தித்துக்கொண்ட ஒரு கணத்தில் அவன் உணர்வுகளின் தத்தளிப்பும் குழப்பமும் அவளுக்குப் புலனாயின.

''ஓ... உனக்கு அப்படித்தான் தெரியும் ராஜு. ஏன்னா, வானத்தோட ஒரு ஓரத்தை மட்டுமே பார்த்துக்கிட்டு இருந்துட்டே. நீ பார்த்த எல்லைக்குள்ளே அடங்கிடாது வானம். அது எல்லையில்லாதது. அவலங்களும் போராட்டங்களும் அநீதிகளும் கடைவிரிச்சிருக்கற நீலத்துல பஞ்சுப் பொதி மாதிரி, சந்தோஷ மேகங்கள் வந்து வந்து போயிடும். உன்னோட பறவைகள் தேசம் மாதிரி, நம்ம அம்மாவோட ஆசை சமையல் மாதிரி. வலியும் போராட்டமும் தான் வாழ்க்கைல நிரந்தரம்... எப்பவும் இருக்கும்.''

''சே! நோ இதா... ரொம்ப நெகடிவ் அப்ரோச் இது...''

''இல்லை ராஜு. இதுதான் பிராக்டிகல். உனக்கு எந்தவிதமான எக்ஸ்போஷரும் இல்ல... ஷவர்ல தினமும் குளிக்கறவனுக்கு மழையோட உயிர் வீச்சு எப்படிப் புரியும்? வலியைத் தீர்க்கறதுக்காக நடக்கற போராட்டத்துலயும் ஒரு சந்தோஷமிருக்கு... அழகு இருக்கு. இது முடிவில்லாத போராட்டம்தான் என்கிற போதிலும் சோர்ந்து போகாம இருக்கறதுல திருப்தி இருக்கு...''

''அப்படின்னா, ஏன் என்கூட பறவைகளைப் பார்க்க வந்தே...? வெறும் பஞ்சுப் பொதி சந்தோஷத்துக்கு அடிமையாகாத வீராங்கனையா இருந்துக்க வேண்டியது தானே!''

''ஆ! ஐ லைக் யுவர் ஆங்கர். உன்னோட வானத்தின் பேர்ல நீ வெச்சிருக்கற பற்று... அது எனக்கும் பிடிச்சிருக்கு; அதை மதிக்கறேன்...''

அவன் சற்றும் எதிர்பாராத கணத்தில், அவன் கையைப் பற்றி சின்னதாக ஒரு முத்தம் பதித்தாள்.

''ஒரு புதிய வானத்துல என்னை எட்டிப் பார்க்க வைச்சதுக்கு தேங்க்ஸ்.''

நாணமும் மகிழ்ச்சியும் ஒருசேர அவன் பதில் சொல்ல முனைவதற்குள், பூட்ஸ் ஒலிக்க வந்து சேர்ந்தார் தனசேகர். ஸ்டேஷனை ஒரு பரபரப்பு பற்றிக் கொண்டது.

(அடுத்த இதழில் முடியும்)





Sporting Heroes

Christmas Gallery





Appreciating the ARTS

Now on Sale

DECEMBER 2008 Rs.10/- ONLY

# GOKULAM

THE Magazine for Children

# ஹாஸ்ய வியத்துக்கள்




தென்னாலிராமனுக்கு ஜலதோஷம் பிடித்திருந்தது. அதைப் பற்றி இப்போதென்னவென்று கேட்டால், சிலருடைய பாக்கியம் அத்தகையது. மக்டனால்டுக்காவது, சர்ச்சிலுக்காவது, ஹரல்டுலாயிடுக்காவது, டக்லஸ் பெயர்பாங்ஸுக்காவது ஜலதோஷம் பிடித்தால், இவ்வுலகிலுள்ள ஐம்பதினாயிரம் தினசரிப் பத்திரிகைகளிலும் அது மறுநாளே வெளியாகவில்லையா? தென்னாலிராமன், இவர்களையெல்லாம்விடப் பெரியவன். ஆகவே, அவனுக்கு எப்போதோ பிடித்த ஜலதோஷத்தைப் பற்றி இப்போது நாம் படிக்க வேண்டியிருக்கிறது.

தென்னாலிராமன் சிவபெருமானோடு தான் இரண்டறக் கலந்துவிட்டதாக எண்ணலானான். சிரசிலுள்ள கங்கா நதியானது மண்டை ஓட்டில் துளை போட்டுக்கொண்டு மூக்கு வழியாகப் பிரவாஹிக்க ஆரம்பித்து விட்டதென்று கருதினான். மனிதப் பிறவியில் ஜலதோஷத்தைவிடக்

கொடிய துன்பம் ஒன்றுமில்லையென்று முடிவு செய்தான். தற்கொலை செய்து கொள்ளலாமா என்றுகூட அந்தவேளை நினைத்தான்.

புவன மாதாவாகிய காளிதேவியைக் குறித்துத் தென்னாலிராமன் கடுந்தவம் புரிந்துகொண்டிருந்தான். கடைசியில் மாதா கருணை கூர்ந்தாள். தனது ஆயிரம் சிரங்களுடனும் ஈராயிரம் கரங்களுடனும் பிரசன்னமானாள். அத்தோற்றத்தைக் கண்டதும் தென்னாலிராமன் முகத்தில் புன்னகை உண்டாயிற்று. புன்னகை விரைவில் பெருநகையாயிற்று. ஆனமட்டும் அடக்கிப் பார்த்தும் முடியவில்லை. குப்பென்று சிரிப்பு மீறிக்கொண்டு வந்தது. கலகல வென்று சிரித்தான்.

மாதா கோபங்கொண்டாள். தன் வடிவத்தைக் கண்டதும் தென்னாலிராமன் பயபக்தியுடன் பேசவும் நாவெழாமல் திகைத்து நிற்பான் என்று தாய் எண்ணியிருந்தாள். ''அடா! ஏன் சிரிக்கிறாய்; உடனே சொல்!'' என்று கேட்டாள்.

''அம்மா, மன்னிக்க வேண்டும். ஒரே மூக்குடன் கூடிய எனக்கு ஜலதோஷம் வந்த போது, நான் பட்ட பாடு சொல்லத் தர மன்று. உயிரை விட்டு விடலாமா? என்று கூட நினைத்தேன். ஆயிரம் மூக்குள்ள உனக்கு ஜலதோஷம் வந்தால் என்ன செய்வாய் என்று நினைத்தபோது எனக்கு அடக்க முடியாத சிரிப்பு வந்தது. நீ உயிரைக் கூட விட முடியாதே?'' என் நான் தென்னாலி ராமன்.




காளி மாதா கோபங்கொண்டாள். 'பார்த்தாயா, இவன் நம்மைப் பரிகாசம் செய்தான்?' என்ற நினைத்தாள். ''நீ விகடகவியாகப் போகக் கடவது'' என்று சாபம் கொடுத்தாள்.

தென்னாலிராமன் மறுபடியும் சிரித்தான். தேவி மீண்டும் சிரிப்புக்குக் காரணம் கேட்டாள்.

''அம்மா! நீ கொடுத்த வரத்தை நினைத்துச் சிரித்தேன். முதலிலிருந்து படித்தாலும் விகடகவி; பின்னாலிருந்து படித்தாலும் விகடகவி'' என்றான்.

மாதா மகிழ்ச்சி கொண்டாள், ''நீ அரண்

மனை விகடகவியாகக் கடவாய்'' என்று வரங்கொடுத்து அந்தர்த்தானமானாள்.

**ஹா**ஸ்யத்திலுள்ள விபத்துக்களை இந்தக் கதையிலிருந்து நன்கு அறிந்து கொள்கிறோமல்லவா? தென்னாலிராமன் காளியின் ஆயிரம் மூக்குகளைக் குறிப்பிட்டது ஓர் உயர்தர ஹாஸ்ய மென்று பலர் கருது வார்கள். தேவி அதை அறிந்து அனுபவித்து மகிழாமல் சாபம் கொடுக்கிறாள். பின்னால் 'விகடகவி'யைப் பற்றிக் கூறியது ஒரு கீழ்த்தர ஹாஸ்யம். தாய் அதைக் கொண்டு மகிழ்ந்து வரம் அளிக்கிறாள். ஜகன்மாதாவின் சங்கதியே இப்படியானால், கேவலம் நம் போன்ற மானிடர்களைப் பற்றிக் கேட்பானேன்?

**ஹாஸ்யம் விளங்காமல் போனாலும் பாதகமில்லை, ஹாஸ்யமாகச் சொல்வதை உண்மையாக எடுத்துக்கொண்டு விட்டால், அதை விட ஆபத்து வேறு கிடையாது.**

மேற்படி கதையில் ஒரு சிறு மாறுதல் செய்தோமானால், 'ஜகன்மாதாவுக்கு நகைச் சுவை இல்லை' என்னும் அபகீர்த்தி ஏற் படாமல் தடுக்கலாம். முதலில் கொடுத் ததை 'வரம்' என்றும், பின்னால் அளித் ததை 'சாபம்' என்றும் பறைசாற்றி விடுங் கள். தென்னாலிராமனின் முதல் பதிலில் இருந்த ஹாஸ்யத்தை அனுபவித்து மகிழ்ந்த அன்னை, 'நீ விகடகவியாயிருந்து எல்லா மக்களையும் மகிழச் செய்வாய்' என்று ஆசீர்வதிக்கிறாள். ஆனால், அடுத் தாற்போல் அவன் ஒரு கீழ்த்தர விகடம் செய்யவே, 'அரண்மனை விகடகவியாகி, நகைச்சுவை இல்லாத ராஜாவுக்கும் பிர புக்களுக்கும் மத்தியிலிருந்து அவஸ் தைப்படக் கடவாய்!' என்று சபிக்கிறாள்.

**கூ**ப்பென்று சிரிப்பு விளைவிக்கக் கூடிய விதத்தில் ஒரு கதை முடிவடை கிறது. கதை கேட்பவரோ மிகவும் சாவதானமாக 'அப்புறம் என்ன ஆச்சு?' என்று வினவுகிறார். இத்தகைய நிலைமையில், ஓடிப் போய்ச் சமுத் திரத்தில் விழுந்து விடலாமா என்று தோன்றுமா, தோன்றாதா? ஹாஸ்யம் விளங்காமல் போனாலும் பாதகமில்லை. ஹாஸ்யமாகச் சொல்வதை உண் மையாக எடுத்துக்கொண்டு விட்டால், அதை விட ஆபத்து வேறு கிடையாது.

**- ஆனந்தவிகடன்**
01.12.1932



''படத்தோட கதை என்னுடையது என்று இரண்டு பேர் கோர்ட்டில் போட்ட வழக்கு என்ன ஆச்சு...?''

''தள்ளுபடி ஆயிடுச்சு...''

''ஏன்...?''

''படத்தைப் பார்த்த நீதிபதி இந்தப் படத்தில் கதையே இல்லே... வழக்கு வேறேயான்னு சொல்லிட்டார்!''

**- என்.எஸ்.வி. குருமூர்த்தி**

● சரவணன், டெல்லி

**"God created light" என்கிறார்கள்... அப்ப அதற்கு முன்பு கடவுள் இருட்டில் இருந்தாரா...?**

அந்த வாசகத்தில் கூறப்படும் lightஐ, சாதாரண பல்ப் வெளிச்சமாக, லைட்டாக எடுத்துக்கொண்டால் நீங்கள் ஒரு 'ட்யூப் லைட்'. ஆதி - அந்தம், நெருப்பு - குளிர், இருள்-வெளிச்சம், இப்படி வேறுபாடுகளைக் கடந்தவனே கடவுள்... அவன் படைத்தது அஞ்ஞான இருட்டை நீக்கும் ஞான ஒளி... அதுதான் அண்ணாமலையில் தீபமாகவும், சபரியில் ஜோதியாகவும் நமக்குள் ஆன்மாவாகவும் ஒளிர்கிறது.

● சுதா மூர்த்தி, காரைக்கால்

**தோல்வியின் ரகசியம் என்ன...?**

வெற்றியின் தம்பட்டம்...!

● தாணுமாலயன், திருவண்ணாமலை

**காரணம் பார்க்காமல் செய்யும் காரியம் எது...?**

இறந்த காரணம் பார்க்காமல் செய்யப்படும் 'ஈமக் காரியம்.' அனாதைப் பிணங்களுக்கு இந்தக் காரியத்தை நாம் காரணம் பார்க்காமல் செய்தால் கடவுள் நம்மைப் பார்ப்பான்.

● சுமிதா, அரக்கோணம்

**எங்க சூர்யாவின் நடிப்பு எப்படி 'வாரணம் ஆயிரத்தில்...'?**

'பூரண பொற்குடம்' நம்ம சூர்யா!

● டி. ஜெய்சிங், கோயம்புத்தூர்

**குனியக் குனியக் குட்டுபவன் புத்திசாலியா... முட்டாளா...?**

# உப்பில்லா பண்டம் தொப்பையிலே..!




குட்டுபவன் குட்டாள்... குட்டக் குட்டக் குனிபவன் முட்டாள். குனியக் குனிய குட்டுவதற்காக குட்டுபவனும் குனிய வேண்டி வரும்... ஆக இவனும் குட்டுப்படாமலேயே குனிந்த ஆழமான அடி-முட்டாள்.

● மல்லிகா அன்பழகன், சென்னை

**புளியோதரைக்குப் பொருத்தமான சைட்-டிஷ் எது...?**

பார்த்தசாரதி பெருமாளைத் தொட்டுக் (கும்பிட்டு)கொண்டு புளியோதரையைச் சாப்பிடுங்கள்... வாழ்க்கை அக்காரவடிசலாகத் தித்திக்கும்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை

**சின்ன வயதில் 'காமிக்ஸ்' புத்தகம் படித்ததுண்டா...?**



'காமிக்ஸ்' புத்தகம் படித்துக் கொண்டிருக்கும் வரையில் நமக்குச் சின்ன வயதுதான்.

● **ரா. பிரசன்னா, மதுரை**

***'உப்பில்லா பண்டம் குப்பையிலே' அப்படீன்னு சொல்றாங்களே... அல்வாவை நாம குப்பையிலா போடறோம்...?***

இப்ப இருக்கற B.P, Sugarக்கு, அல்வாவை குப்பையிலதான் போடணும்...உப்பில்லா பண்டத்தைத்தான் தொப்பையிலே போடணும்.

● **சி. இந்து அழகேஷ், கள்ளக்குறிச்சி**

***கவிதைக்குப் பொய் அழகு... நாடகத்துக்கு...?***

'மெய்' அழகு... 'லைவ்' ஆக நடித்துக் காட்டப்படுவதால்!

● **சி. மகேஷ், அண்ணாநகர்**

***பானை போல் வயிறு (தொப்பை) இருப்பதாக மனைவி கூறுகிறாள்... அவளுக்கு என்ன பதில் சொல்வது...?***

'பானை (கைப்) பிடித்தவள் பாக்கியசாலி' என்று கூறுங்கள்.

● **எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி**

***மனிதனைவிட குரங்குக்கு ஞாபக சக்தி அதிகம் என்கிறார்களே...?***

உருவாக்கியவர்களை மறந்துவிடுவது மனித சுபாவம்...!

## கல்யாண சிலபஸ் மாறியிருக்கோ?

● **மீனா ரெங்கநாதன், மேற்கு மாம்பலம்**

***திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுவது உண்மையா...?***

போன ஜென்மம் வரை, நான் பார்த்தவரையில் உண்மைதான். இப்ப என்ன சிலபஸ் மாறியிருக்கோ! போய்ப் பார்த்தாத்தான் சொல்ல முடியும்.

● **லலிதா, கும்பகோணம்**

***எப்படி மரணம் நிகழ்ந்தால் நம்மை அது சோகத்தில் ஆழ்த்துது... இரேஷியான பதில் ப்ளீஸ்...?***

குளிக்கும்போது நாம் கரைந்து போய் தண்ணியோட தண்ணியாக சாக்கடைக்குள் சென்றுவிட்டால்... மறைந்த சாரி கரைந்த நமக்கு மரண பயத்தைவிட மரண ஆச்சரியம்தான் மிஞ்சும். நம்மைச் சேர்ந்தவர்கள் காணாமற் போன நம்மைத் தேடி காலத்தைத் தள்ளுவார்கள். சோகத்தைவிட மர்மம் பெட்டர் இல்லையா...?

# சிவ விஷ்ணு அபேதத்தைக் காட்டும் சங்கர நாராயணர்



இந்து மதத்தின் இருபெரும் பிரிவுகளாய் சைவமும் வைணவமும் விளங்கின. இரண்டு பிரிவுகளுக்கும் இடையே அவ்வப்போது பூசல்கள் தோன்றியவண்ணம் இருந்ததையும் வரலாறு பதிவு செய்திருக்கிறது. ஆனாலும் இரு தெய்வங்களுக்குள்ளும் உயர்வு தாழ்வு கற்பிக்காத ஒரு பிரிவும் இருந்து வந்திருக்கிறது. கம்பன்கூட இந்த பேதத்தால் வரும் பூசல்கள் பற்றிப் பேசுகிறான். 'சிவனே பெரிய தெய்வம் என்றும் திருமாலே பெரிய தெய்வம் என்றும் பிரித்துப் பேசும் அறிவிலோர் முக்தி இன்பத்தை அடைவது எவ்வாறு முடியாதோ... அதைப் போல' என்று ஒரு உவமையே வைக்கிறான் கம்பன். 'அரன் அதிகன்; உலகு அளந்த அரி அதிகன் என்று உரைக்கும் அறிவிலோர்' என்று சற்று சூடாகவே பேசி விடுகிறான். தீவிர சைவனாகவோ தீவிர வைணவனாகவோ தன்னை அடையாளம் காட்டிக்கொள்ளாத கம்பனைப் போல், பரம வைஷ்ணவர்களாய் இருந்த ஆழ்வார்களுக்குள்ளும் இந்தக் கருத்துள்ளவர்கள் இருந்திருக்கிறார்கள்.

பேயாழ்வார், முதலாழ்வார் மூவரில் ஒருவர். அவர் திருப்பதிக்குப் போயிருக்கிறார். திருமலை மேல் எழுந்தருளியிருக்கும் திருமாலை சேவித்திருக்கிறார். பெருமாள் அவருக்கு எப்படி காட்சி கொடுத்

த.கி.நீலகண்டன்

# இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து!

திருக்கிறார் பாருங்கள்!

''தாழ்சடையும் நீள்முடியும்
ஒண்மழுவும் சக்கரமும்
சூழ் அரவும் பொன் நாணும்
தோன்றுமால் - சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல்
எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து!''

சிரஸில் ஒருபுறம் தாழ்சடை. இன்னொருபுறம் அழகிய நீண்ட கிரீடம். கைகளில் ஒன்றில் மழு. இன்னொரு கையில் சக்கரம். கழுத்தில் ஒரு பாதியில் பாம்பு; இன்னொரு பாதியில் பொன்னால் ஆகிய ஆபரணம்! ஒருபுறம் சிவபெருமான் ஆகவும் இன்னொரு புறம் திருமால் ஆகவும் உள்ள ஒருருவில் காட்சி தந்திருக்கிறான் ஏழுமலையான்!

பேயாழ்வாரின் சமகாலத்தவர் பொய்கை ஆழ்வார். இவரும் முதல் மூன்று ஆழ்வார்களில் ஒருவர். இவர் பாசுரம் ஒன்றிலும், இப்படி ஒரு காட்சியை அவர் கண்டதாகப் பதிவு செய்திருக்கிறார். ''பெயர் என்று எடுத்துக்கொண்டால் ஒருவன் பெயர் ஹரன். இன்னொருவன் பெயர் நாராயணன். வாகனம் என்றால் ஒருவனுக்கு எருது வாகனம். இன்னொருவனுக்கு கருட வாகனம். இவன் வாழ்வது மலை. அவன் துயில்வது கடல். இவன் தொழில் அழிப்பது. அவன் தொழில் காப்பது. ஒருவன் கையில் திரிசூலம். இன்னொருவன் கையில் சக்கரம். இவன் எரிக்கும் சிவந்த நெருப்புவண்ணன். அவன் குளிர்விக்கும் கரிய மேகவண்ணன். இப்படித் தோற்றத்திலும், தொழிலிலும், வேறு வேறாகத் தோன்றும் இருவரும் ஒருவரே! ஏன் என்றால் இருவரும் ஓதும் நூல் வேதம்தான்.

அரன் - நாரணன் நாமம்;
ஆன்விடைப்புள் ஊர்தி
உரைநூல் மறை; உறையும்
கோயில்வரை - நீர்
கருமம் அழிப்பு - அளிப்பு; கையது
வேல் - நேமி
உருவம் எரி - கார்மேனி ஒன்று''

ஆழ்வார்களின் இந்தப் பாசுரத்தின் அடிப்படையில், சிவ விஷ்ணு அபேதத்தைக் கட்டிக் காக்கும்

தலமாக விளங்குகிறது, நெல்லைக்கு அருகில் உள்ள சங்கர நாராயணர் கோயில். இங்கு ஆழ்வார்கள் வர்ணித்த விதமாகவே பெருமான், பாதி உரு சங்கரனாகவும் பாதி உரு நாராயணன் ஆகவும் ஒருருவில் காட்சி தருகின்றார்.



கேரளத்தில் உள்ள திருச்சூர் வடக்கு நாதர் ஆலயத்திலும் சங்கர நாராயணருக்குத் தனிச் சன்னிதி இருக்கிறது. சைவம் போற்றும் சிவ வடிவங்களில் ஒன்றாக 'அரியர்த்தர்' என்ற வடிவமும் விளங்குகிறது.

அர்த்த நாரீசுவர வடிவம் போல, பாதி உடல் சிவபெருமான் வடிவிலும் பாதி உடல் மகாவிஷ்ணு வடிவிலும் உள்ளது.

பழைமையான சங்கர நாராயணர் வடிவங்கள் கல்லாலும் சுதையாலும் ஆக்கப்பட்டவையே. ஆனால், இன்று சங்கரநாராயணர் வடிவத்தை செப்புப் படிமமாகவும் வடித்து வைத்திருக்கிறார்கள்.

அர்த்த நாரீசுவர வடிவம் போல, பாதி உடல் சிவபெருமான் வடிவிலும் பாதி உடல் மகாவிஷ்ணு வடிவிலும் உள்ளது. வலப்புறம் சிவ பெருமானுடையது. சிரஸில் ஜடாமகுடம்; அதில் சந்திர கலை; ஊமத்தை மலர்; வலது மேற்கரத்தில் மழு; கீழ்க் கரம் அபயமுத்திரை; இடையில் புலித்தோல் ஆடையைக் கச்சையாக, தொடை வரை மட்டுமே அணிந்திருக்க, முக்கண்ணனாய், நாகாபரணம் பூண்டு, ருத்திராட்ச மாலை சரம் சரமாக மார்பை அணி செய்ய, காதில் மகர குண்டலம் விளங்க, முழந்தாளில் வீர கண்டாமணி அணிந்து, சிவச் சின்னங்கள் தோன்ற விளங்குகிறது வலது பாகம்!

சிரசின் இடப்புறத்தில் பாதியளவில் அழகிய உயர்ந்த கிரீடம்; இடது மேற்கரத்தில் சங்கும் கீழ்க்கரத்தில் கதாயுதமும்; அலங்காரப் பிரியனாதலால், இடையில் பட்டு பீதாம்பரங்களும் மார்பிலும் தோளிலும் கைகளிலும் அணிமணி ஆபரணங்களும் தரித்து, எழிலார்ந்த கோலத்தில் விளங்குகிறார் திருமால்!

புன்முறுவல் பூத்த முகத்துடனும் வசீகரமான தோற்றத்துடனும் விளங்கும் இந்த வடிவத்தில் சிவனுக்குரிய வலதுபுறம் அழித்தல் தொழிலுக்கு வேண்டிய உறுதியுடனும்; விஷ்ணுவுக்கு உரிய இடதுபுறம் காத்தல் தொழிலுக்கு வேண்டிய கருணையின் குழைவுடனும் விளங்குகின்றன; அம்பிகைக்குச் சொந்தமான இடது புறத்தை, தான் பிடித்துக் கொண்டதாலோ என்னவோ, மாலவனும் தன் தங்கையின் ஒயிலைத் தன்னுருவிலும் காட்டுகிறான்!

தேவார திவ்யப்பிரபந்தங்களின் ஆதாரத்தில் உருவான வடிவங்களில், சங்கர நாராயணர் வடிவமும் ஒன்று!

**(பெருகும்)**

# திணறிப்போன சென்னை திண்டாடிய மாநகராட்சி

**நான்கு நாட்கள் அடித்துக் கொட்டிய மழையால் சென்னை நகரம், நரகமாகிப் போனது. சென்னை மக்களின் வாழ்க்கை முடங்கிப் போனது! ''மாநகராட்சி என்னதான் செய்கிறது?'' மேயர் மா. சுப்பிரமணியத்தைச் சந்தித்தோம்.**

''ஒரு நாளில் 13, 14 சென்டிமீட்டர் மழையைத் தாக்குப்பிடிக்கும் அளவுக்கே வடிகால் வசதிகள் உள்ளன. ஆனால், நான்கு நாட்களில் தொடர்ந்து 70 சென்டிமீட்டர் மழை கொட்டிவிட்டது. நிஷா புயல் தொடர்ந்து கடலில் மையம் கொண்டிருந்ததால் அடையாறு, கூவம், பக்கிங்காம் கால்வாய் ஆகிய நீர்நிலைகளில் வந்த வெள்ளத்தை, கொந்தளிப்பு காரணமாக, கடல் உள்வாங்கவில்லை. சென்னை நகரம் கடல் மட்டத்திலிருந்து ஒரு அடி குறைவாக உள்ளது. மேலும், மழை கொட்டிய மூன்றாவது நாளில், சென்னைக்குக் குடிநீர் வழங்கும் ஏரிகள் அனைத்தும் திறந்து விடப்பட்டன. இதனால், ஏற்கனவே கால்வாயில் வெள்ளம் உள்வாங்காத நிலையில், கால்வாய்களில் நீர்மட்டம் உயர, தெருக்களிலும், குடியிருப்புப் பகுதிகளிலும் தண்ணீர் தேங்கிவிட்டது. போரூர் ஏரி நிறைந்து வழிந்ததால், சென்னையின் மேற்குப் பகுதி மோசமாகப் பாதித்துவிட்டது. இருந்தும் நிவாரணப் பணிகளைப் போர் வேகத்தில் செய்தோம்.''

**சென்னைக்கு மழைநீர் வடிகால் வசதிகளை எப்போதுதான் மேம்படுத்துவீர்கள்?**

''இப்போது 910 கி.மீட்டருக்கு மழை நீர் வடிகால் வாய்க்கால்கள் இருக்கின்றன. 2001-06ல் ஜெயலலிதா ஆட்சியில் வெறும் 30 கி.மீதான் கட்டப்பட்டது. இன்னமும் 100 கி.மீ கட்டப்பட வேண்டியிருக்கிறது.''

**மழைக்காலம் வருவதற்கு முன்னரே முன்னெச்சரிக்கை நடவடிக்கையாய் கால்வாயைத் தூர்வாரி வடிகால் வசதி செய்திருந்தால், நிவாரணச் செலவு**

## சொல்லுங்கள்... நடவடிக்கை எடுக்கிறேன். -மேயர் பேட்டி



✱ மேயர் மா. சுப்பிரமணியம்



**குறைந்திருக்குமே?**

''எங்கள் பராமரிப்பில் இருக்கும் கால்வாய்களை நானே நேரடியாக அடிக்கடி பார்வையிட்டு, தூர் வாரி வைக்க நடவடிக்கை எடுக்கிறேன். அதேபோல், தெருவோர மழைநீர் வடி கால்களையும் சோதனை செய்து அடைப்பு இல்லாமல் பார்த்துக் கொள் கிறேன். பொதுப்பணித்துறையும் பரா மரிப்பு செய்கிறது.''

**இந்தமுறை அடையாற்றில் ஆகா யத் தாமரைச் செடிகளை அகற்றி, கரையை ஒட்டியே போட்டதால் வெள்ள நீர்ப் போக்கு தடைப்பட்டது. இந்த அரைகுறை வேலை ஏன்?**

''நீங்கள் சொல்வது சரிதான். அப் படி வெட்டிப் போடப்பட்ட ஆகாயத் தாமரைகளை நாங்கள் அகற்றி நீர்ப் போக்குக்கு வழி செய்தோம்.''

**சென்னையில் பல வீடுகளில் மழைக் காலத்தில் டிரைனேஜ் கழிவு நீர், கழிவறை வழியாக வீட்டுக்குள் புகுந்து, வீடு முழுவதும் கழிவுநீர் தேங்கி விடுகிறது. இதற்குக் காரணம் வருடா வருடம் சாலையின் உயரத்தை அதிகமாக்குவதும் வீடுகள் பள்ளமாகப் போய் விடுவதும்தான் என்கிறார்கள். இதற்குத் தீர்வே கிடையாதா?**

''சாலைகள் உயரமாகிப் போனதால் வரும் பிரச்னையல்ல இது. தெருக்களில் தண்ணீர் தேங்கும்போது உடனடி தீர் வாக மக்களே, ட்ரைனேஜ் மூடிகளைத் திறந்து, தண்ணீரை கழிவுநீர் கால் வாயில் திருப்பி விடுகிறார்கள். இந்த நிலையில் கழிவு நீர் கால்வாய் நிறைந்து, நீர் பின்வாங்கும்போது, இணைப்புகள் வழியாக, டாய்லட்டுக்குள் நுழைந்து வீட்டுக்குள் தண்ணீர் வந்துவிடுகிறது.''

**நீங்கள் என்னதான் நிவாரண நடவடிக்கை எடுத்தாலும், பல பகுதி களில் 'எந்த நிவாரணமும் இல்லை' என்ற குரல்கள் பலமாகவே கேட் கிறதே!**

''எங்கள் கவனத்துக்குக் கொண்டுவந் தால் உடனடி நடவடிக்கை எடுக்கி றோம்.''

**– ப்ரியன்**

அருள்வாக்கு

# இளைஞர் கடமை

பிறருக்கு உபகாரம் செய்வதற்கே நமது சரீரம் ஏற்பட்டிருக்கிறது என்பது ஆன்றோர் மொழி. 'பரோபகாரார்த்தம் இதம் சரீரம்' என்பார்கள். தேகத்தில் நல்லதெம்பு இருக்கிறபோதே, பிறருக்காக நன்றாக உழைக்க உடலில் சக்தி இருக்கிறபோதே யுவர்கள் சேவை நெறியில் ஈடுபட வேண்டும்.

பிறருக்குச் சேவை செய்வதற்காகவே தேக பலத்தை நன்கு காத்துக் கொள்ள வேண்டும். தேக பலத்தைவிட ஒழுக்க பலம் முக்கியம். நமது மதம் கூறுகிற சாஸ்திர தர்ம நெறியின்படி சுத்தமான வாழ்வு வாழ வேண்டும். இப்படி நாம் தூய்மையாக இருந்தால்தான் பிறருக்கு நல்லமுறையில் சேவை செய்ய முடியும். காமக் குரோதாதிகள் இருந்தால் எப்படி நல்ல முறையில் சேவை செய்வது?

தேக பலம், அஹிம்சை, பயமற்ற நிலை இவற்றோடு சொந்தக் கஷ்டங்களைப் பாராட்டாமல் பிறரைக் காக்கும் பான்மையும் சேர்ந்தால் அது மிகப் பெரிய சீலமாகும். இதற்கே 'க்ஷத்ர தர்மம்' என்று முன்னாளில் பெயர் சொல்லப்பட்டது. 'க்ஷதாத் கில த்ராயதே இதி க்ஷத்ரம்' – 'பிறரைத் தீமையிலிருந்து காப்பதே க்ஷத்ரம்' என்பது இதன் பொருள். 'க்ஷத்திரியர்' என்ற பெயர் இதிலிருந்துதான் பிறந்தது. இப்போது நம் நாட்டு யுவர்கள் இந்த க்ஷத்ர தர்மத்தை மேற்கொள்ள நிரம்ப அவசியமிருக்கிறது. பலிஷ்டர்களைக் கண்டு பயப்படக்கூடாது. பலவீனவர்களை பயமுறுத்தவும் கூடாது. பலவீனவர்களை வெறும் மிருக பலம் படைத்தவர்கள் கொடுமைப்படுத்தாதபடி சர்வத்தியாகமும் செய்து காப்பாற்ற வேண்டும்.



மெஜாரிட்டி, மைனாரிடி என்ற பயம் இல்லாமல், தர்மத்துக்கு ஆபத்து வந்தால் உயிரைத் திருணமாக மதித்துப் போராடுகிற நெறி இளைஞர்களுக்கு இருக்க வேண்டும்.

– ஜகத்குரு காஞ்சிகாமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



# தாலிக்கயிறு

ஈரத்துணிகளை, கொடிகளில் உலர்த்திக் காயப்போடுவது போல, மஞ்சள் கயிறுகளை உலர்த்திக் கொண்டிருந்தார் ஓர் இளைஞர். ''தாலிக்கயிறு தயாரிக்க அனுப்புறதுல எங்க ஊருதாங்க ரொம்ப வருஷமா ஃபேமஸ். ஊருக்குள்ள எங்கே திரும்பினாலும் மஞ்சக் கயிறுகளைக் காயவெச்சிருக்கற காட்சிகளைக் காணலாம்!'' என்றார்கள்.

உடுமலைப்பேட்டையிலிருந்து பத்து கி.மீ. தூரம். வரதராஜபுரம் கிராமம். அங்கு முந்நூறு குடும்பங்கள். சுமார் ஐம்பது குடும்பங்களுக்கு, தாலிக்கயிறு உற்பத்திதான் குடிசைத் தொழில்.

''என்னோட பன்னிரண்டு வயசுலேர்ந்து இதைத்தான் செஞ்சுட்டு வர்றேன். இப்ப எனக்கு ஐம்பத்து அஞ்சு வயசு. எங்க ஊருக்கு இது அறுபது - எழுபது வருஷத் தொழிலு. இதனை உற்பத்தி செஞ்சு ஊருக்கெல்லாம் அனுப்பி வைக்கிறதுல எங்க கிராமத்துக்கே பெருமை. நம்ப வாழ்க்கையில நவீன மாற்றங்கள் வந்தாலும், தாலிக்கயிறுக்கு இருந்து வர்ற மதிப்பும் பாதுகாப்பும் இன்னமும் மாறாம இருக்கு. இதுதான் நம்ம சமூக அமைப்போட பலம். அதனோட நம்பிக்கை சின்னங்களில் ஒண்ணுதான் தாலிக்கயிறு!'' என்று தம் தொழில்சார்ந்த மகிமை பற்றி எடுத்துச்சொல்கிறார் எஸ். ஆறுமுகம்.

சோமனூர் விசைத் தறிக் கூடங்களில், காட்டன் நூல் கொள்முதல் செய்கின்றனர். நாற்பதாம் நெம்பர், முப்பதாம் நெம்பர் காட்டன் நூல்கள் இதற்குப் பயன்படுத்தப்படுகின்றன. கை ராட்டை. அதில் மூன்று பேர் வேலை. சிறு சிறு முடிச்சுகள் நுனியில் போடப்படுகின்றன. கைராட்டை சுற்றி நான்கு பிரி நூலாகத் தயாரிக்கப்படுகிறது. பின்னர், மஞ்சள் சாயத் தண்ணீரில் (தண்ணீர் சூடாக இருக்க வேண்டும்) முக்கி எடுக்கிறார்கள். சாயம் படிந்த பின்னர், ஐம்பது இஞ்ச் நீளம் அல்லது நாற்பத்தியிரண்டு இஞ்ச் நீளத்துக்கு, தனித்தனி தாலிக் கயிறுகளாக வெட்டுகின்றனர். அவற்றை வரிசை கட்டி கொடிகளில் தொங்கவிட்டு வெயிலில் காயவைக்கின்றனர். தாலிக்கயிறு ரெடி.

''நான் இந்த ஊருக்குக் கல்யாணமாகி வந்து முப்பத்தி நாலு வருஷம் ஆகுது. வந்ததுலேர்ந்து நானும் இந்த வேலையை என் கணவரோட சேர்ந்து செஞ்சு வர்றேன். மஞ்சள், ஆரஞ்சு, லெமன்னு மூணு கலர்கள்ல தாலிக்கயிறு தயார் பண்றோம். மஞ்சள் தாலிக்கயிற்றுக்குத்தான் அதிகமா ஆர்டர் வரும். தாலிக்கயிற்றுக்கு மஞ்சள்

கலர்தான் எடுப்பா இருக்கும். பெண்களோட இல்லற வாழ்க்கைக்கு அச்சாரமா, நாம தயாரிக்கற மஞ்சக்கயிறு அவங்களோட கழுத்தை அலங்கரிக்கப் போகிறதுங்கற ஆத்ம திருப்தி எங்களுக்கு!'' என்கிறார் ஆறுமுகத்தின் மனைவி மனோன்மணி.

''ஒரு பண்டலுக்கு இருபத்தைஞ்சு டஜன். ஐந்நூறு பண்டல் உற்பத்தின்னா அதுல நானூறு பண்டல் மஞ்சள்

# கிராமம்!



தாலிக்கயிறு. நூறு பண்டல்கள்ல ஆரஞ்சு தாலிக்கயிறும் லெமன் கலர் தாலிக்கயிறும் அடங்கும். தமிழ் நாட்டுல பெரும்பான்மை பெண்கள் விரும்பி அணியறது மஞ்சள் கலர் தாலிக்கயிறுதான். ஆரஞ்சு கலர் தாலிக்கயிறு இப்ப எல்லாம் சென்னையிலயும் சில பகுதிகள்ல வேணும்னு கேட்டு வாங்கிப் போறாங்க. விஜயவாடா பகுதியில லெமன் கலர் தாலிக்கயிறுக்கு நல்ல மார்க்கெட். இப்ப தமிழ் நாட்டுல வேலூர், கிருஷ்ணகிரி மாவட்டங்கள்ல கொஞ்சம் பெண்கள் லெமன் கலர் தாலிக்கயிறு வேணும்ங்கறாங்க.

அரசாங்கம் எங்களைக் கைத்தறி நெசவாளர் பிரிவுல சேர்க்காம பொதுத் தொழில் பிரிவுல வெச்சிருக்கு. அவங்களுக்குத் தர்ற இலவச மின்சாரம் (குறைந்தது 50 யூனிட்), எங்களுக்குத் தர்றதில்லை. ஒருவகையில பார்த்தா நாங்களும் நெசவாளர்களே. அவங்க துணி உற்பத்தி பண்றாங்க. நாங்க அதே நூலைக் கொண்டு தாலிக்கயிறு தயாரிக்கிறோம். துணி மானத்தைக் காக்குது. தாலிக்கயிறு நம்ம சமூகத்தோட ஒழுக்கத்தை நெறிப்படுத்தும் அணிகலனா இருக்குது. கைராட்டை இல்லாம நாங்க இந்தத் தயாரிப்பில் ஈடுபட முடியாது. எங்கள நெசவாளிகளா ஏன் அரசாங்கம் அங்கீகரிக்கலைன்னு எங்களுக்குப் புரியலை!'' என்கிறார் வரதராஜபுரம் எஸ். ஆறுமுகம்.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



* மனோன்மணி
* ஆறுமுகம்

# பிலிம் இங்க் to சரோஜா

"எனது அப்பா இந்திய ராணுவத்தில் மருத்துவராகப் பணியாற்றியவர். நான் பிறந்தது லக்னோவில். படித்தது டெல்லி, பஞ்சாப் போன்ற வட இந்திய மாநிலங்களில். எனக்கு தமிழ், கன்னடம், தெலுங்கு, ஹிந்தி, ஆங்கிலம் போன்ற மொழிகள் நன்றாகத் தெரியும். இந்தியாவின் பல்வேறு மாநிலங்களில் வசித்ததால் மொழிப் பாகுபாடு என்னிடம் கிடையாது. பல்வேறு கலாசாரங்கள், பண்பாடுகள் எனக்குத் தெரியும் என்பதால் என் கேரக்டரை உணர்ந்து செய்வதற்கு வசதியாக உள்ளது" என்று சொல்கிறார் சென்னை - 28, சரோஜா, சேவல் என ஹாட்ரிக் வெற்றிகளைக் குவித்துவரும் சம்பத்.

"என் பெற்றோர்களுக்குச் சொந்த ஊர் ஸ்ரீரங்கம். எனக்கு சினிமாவில் நடிக்க வேண்டும் என்ற ஆர்வம் சிறு வயது முதலே இருந்தது. என் அம்மாவுக்கு நான் நடிகனாக வருவதில் உடன்பாடில்லை. என் ஆர்வத்தை அடக்கமுடியாமல் பெங்களூரில் நாடகங்களில் நடித்தேன். "பிலிம் இங்க் என்ற நாடகக் குழுவைத் துவக்கி க்ரிஷ் கர்னாட், ஷேக்ஸ்பியர், விஜய்டெண்டுல்கர் போன்ற இலக்கியப் பிதாமகர்களின் நாடகங்களில் நடித்து, என்னை நல்ல நடிக அந்தஸ்துக்கு உயர்த்திக்கொண்டேன். வாழ்க்கையை நடத்த, பெங்களூரில் விளம்பர நிறுவனம் நடத்தினேன். என்னுடைய அப்பா மட்டும், 'நிச்சயம் சினிமாவில் பெரிய ஆளாக வருவாய்' என்று தொடர்ந்து உற்சாகப்படுத்தினார்.

காத்திருந்ததன் பயனாக 'பிம்பா', 'ப்ரீத்தி, பிரேமா, பிரணயா' ஆகிய இரு கன்னடப் படங்களில் நடிக்க வாய்ப்பு கிடைத்தது. இந்த இரண்டு படங்களுமே கன்னடத்தில் பல விருதுகளை வாங்கிக் குவித்தன. இந்த வெற்றி, சமுத்திரக் கனியின் இயக்கத்தில் விஜயகாந்த் நடித்த 'நெறஞ்ச மனசு' படத்தில் வில்லனாக நடிக்க வாய்ப்பைப் பெற்றுத் தந்தது.

படத்தின், ப்ரிவியூ பார்த்த பாலசந்தர் சார், படம் முடிந்து என் கையைப் பிடித்து, சில நிமிடங்கள் என்னை வாழ்த்தினார். வாழ்க்கையின் மறக்க முடியாத தருணங்கள் அவை. யாரைப் பார்க்க வேண்டும் என்று சிறிய வயதில் ஏங்கினேனோ, யார் படங்களில் நடிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேனோ, அந்த இயக்குநர் சிகரம் கே.பி. சாரே என்னை வாழ்த்திப் பேசியது, கடவுள் ஆசிர்வாதத்தால் என்று நினைக்கிறேன்.

தொடர்ந்து வில்லனாக மட்டுமே நடித்து வந்த என்னை, பருத்தி வீரனில் அமீர் வேறொரு பரிமாணத்தில் காட்டினார். சில காட்சிகளிலேயே வந்தாலும், தமிழ்நாட்டின் குக்கிராமத்தில் வாழும் சாதாரண மனிதனைப் போல் நடித்தது. யதார்த்தமான நடிப்பை வெளிப்படுத்தும் விதத்தில் அமைந்தது.

நான் வொர்க் பண்ணிய டீமிலேயே ரொம்ப ஜாலியாக உணர்ந்தது சரோஜா டீம்தான். நெறஞ்ச மனசில் வெங்கட் பிரபு எனது தம்பியாக நடித்தார். ஆரம்பத்தில் அவர் கங்கை அமரனின் மகன் என்பதே எனக்குத் தெரியாது. ஷூட்டிங் ஆரம்பித்து பல நாட்களுக்குப் பிறகுதான் தெரிய வந்தது. அந்த அளவுக்கு வெங்கட் பிரபு எந்த பந்தாவோ ஆர்ப்பாட்டமோ இல்லாதவர். வெங்கட் பிரபுவின் வெற்றிக்குக்

காரணம் இதுதான்.

எந்தத் துறையில் நாம் செல்ல நினைக்கிறோமோ அதில் முறையான பயிற்சி அவசியம். அதுபோல சினிமாவில் நடிகனாக வர ஆர்வம் இருப்பவர்களுக்கும் பயிற்சிதான் முக்கியம். முறையான பயிற்சி பெறும்போது, எந்தக் கோணங்களில் நாம் சரியாக இருப்போம், எந்த கலர் நமக்குப் பொருந்தும், எப்படி பாடிலாங்குவேஜில் வெளிப்படுத்துவது போன்ற பல்வேறு நுணுக்கங்களை அறிந்து கொள்ள முடியும்.

இயக்குநர் சொல்லும் கேரக்டரை நம் மனக்கண் முன் கொண்டுவந்து நிறுத்தி கற்பனை செய்து பார்க்கும் திறனும், அதைப் பிரதிபலிப்பதும் நடிகனுக்கு அவசியம்.

சம்பத் என்றால் எந்த ஹீரோவுடைய படத்திலும் நடிக்கமுடியும் என்ற நம்பிக்கையான நற்பெயர்தான் என் லட்சியம். சினிமா என்றாலே என்னைப் பொறுத்தவரை சிறந்த பொழுது போக்கு மீடியம்தான். கல்வி, இன்டர்நெட், பத்திரிக்கைகள் மூலமாக இன்றைய தலைமுறை பல நல்ல விஷயங்களைத் தெரிந்து கொள்கிறது. எனவே சினிமா கருத்து சொல்லும் மீடியமாகத்தான் இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. ஆபாசமில்லாத, நாகரீகமான பொழுதுபோக்கு சினிமாக்களையே இன்றைய ரசிகர்கள் எதிர்பார்க்கிறார்கள்.

கோடம்பாக்கத்தில் நடிகனாகும் முயற்சியில் எத்தனையோ பேர் ஸ்டுடியோ வாசலில் தவம் கிடக்கின்றனர். பல போராட்டங்களைச் சந்திக்கின்றனர். நான் இதுபோன்று கஷ்டப்படவில்லை. சரியான நேரத்தில், சரியான நபர்களின் கண்களில் பட்டிருக்கிறேன். அதுதான் இந்த அளவுக்கு என்னைக் கொண்டு வந்திருக்கிறது. இதற்கு காரணம் என் அப்பாவின் ஆதரவும், ஆண்டவனின் ஆசியும்தான் என்பதில் மாற்றுக் கருத்தில்லை.''

– ராகவ்குமார்



# நூற்றாண்டு கால தனிமை!

முதுகுக்குப் பின்னால் இறக்கைகள் முளைத்த ஒரு தேவதை, சர்வசாதாரணமாகச் சாலையைக் கடந்து சென்று, ஹோட்டலுக்குப் போய் சர்வரிடம் ஒரு காப்பி ஆர்டர் செய்வாள். சர்வரும், சரி என்று தலையாட்டிவிட்டு கொண்டுவந்து வைத்துவிட்டுப் போய்விடுவார். சாப்பிட்டு முடித்து, பில் கட்டிவிட்டு, வெளியில் வந்து ஆட்டோ பிடித்துக் கொள்வாள் அந்தத் தேவதை.

இதை, போகிறபோக்கில் அப்படியே எழுதிச் சென்றால் மேஜிகல் ரியலிசம். மிகவும் அசாதாரணமான சம்பவங்கள் மிக இயல்பாக நடைபெறும். சாதாரண சம்பவங்கள் அசாதாரணமான முறையில் விரியும். மேஜிகல் ரியலிசத்தின் உத்தி இது.



* காப்ரியல் கார்சியா மார்க்குவேஸ்

இன்று நாம் அதிகம் விவாதித்துக் கொண்டிருக்கும் மேஜிகல் ரியலிசம் என்னும் இலக்கியக் கோட்பாட்டைப் பிரபலப்படுத்தியவர் காப்ரியல் கார்சியா மார்க்குவேஸ். பிரபலப்படுத்திய புத்தகம், நூற்றாண்டு காலத் தனிமை. One Hundred Years of Solitude. 1967ல் வெளிவந்த இந்நூலின் விற்பனை, இன்று வரை சரியவில்லை. வெளிவந்தவுடனேயே விமர்சகர்கள் சொல்லிவிட்டார்கள். 'இன்னும் சில நூறு ஆண்டுகளாவது இந்நூல் தொடர்ந்து விவாதிக்கப்படும்; கொண்டாடப்படும்.'

மிகுந்த போராட்டத்துக்குப் பிறகே இந்நாவலுக்கான மொழியைக் கண்டுபிடித்திருக்கிறார் மார்க்குவேஸ். கதைக்களம் கிடைத்துவிட்டது; கதைக்கான கட்டமைப்பும் கிடைத்துவிட்டது; மொழி மட்டும் கைகூடவில்லை. வீட்டில் இருப்பவர்களை அழைத்துக்கொண்டு சுற்றுலா சென்று கொண்டிருந்தபோது, பாதி வழியில் யோசனை உதித்ததாம். சட்டென்று காரைத் திருப்பிக்கொண்டு வீட்டுக்கு விரைந்திருக்கிறார். கதவைத் தாழிட்டுக் கொண்டார். வாரக்கணக்கில் கூட அல்ல; மாதக்கணக்கில் (பதினைந்து மாதங்கள்) உள்ளேயே அடைந்து கிடந்திருக்கிறார். கடைசி வாக்கியத்தை எழுதி முடித்தபிறகே கதவைத் திறந்திருக்கிறார்.

மகோன்டா (Maconda) என்னும் கற்பனை கிராமத்தில் விரிகிறது கதை. ஒரு குடும்பத்தின் கதையாகத் தொடங்கி, ஒரு கிராமத்தின் கதையாக விரிந்து, ஓர் இனத்தின் குரலாக கம்பீரமாக உயர்ந்து நிற்கிறது நூற்றாண்டு காலத் தனிமை. நூறு ஆண்டு

களில் நடைபெறும் கதை என்று தலைப்பு அறிவித்தாலும், கால அளவை அறுதியிட்டுக் கூறுவது சிரமம். கதாபாத்திரங்களின் பெயர்களும், அவர்களுடைய உறவுமுறைகளும்கூட தொடக்கத்தில் குழப்பத்தையே உண்டுசெய்யும். கதையும்கூட ஒரு கோர்வையாக இருக்காது. பாட்டி கதை சொல்வது போல், ஓரிடத்தில் இருந்து இன்னொரு இடத்துக்கு அநாயாசமாகப் பாய்ந்து செல்லும். ஒரே சம்பவம், வெவ்வேறு நபர்களால் வெவ்வேறுவிதமாகச் சொல்லப்படும்.

எல்லாச் சம்பவங்களும் ஒரே சமயத்தில், ஒரே நேர்க்கோட்டில் நடப்பது போன்ற தோற்றம் கிடைக்கும். பாதி புத்தகத்தைக் கடக்கும்போது, அபிப்பிராயம் மாறும். வெவ்வேறு காலகட்டங்களில் கதை முன்னும் பின்னுமாக நகர்வது பிடிபடும். கதையின் வேகமும் அவ்வப்போது மாறிக் கொண்டிருக்கும். ஏகப்பட்ட குறியீடுகளும் நுணுக்கமான ஒப்பீடுகளும் புத்தகம் முழுவதும் பரவியிருக்கின்றன.

இதுதான் கதை என்று ஒற்றை வரியில் சொல்லிவிட முடியாது. குறிப்பிட்ட நிலப்பரப்பில் வாழும் மக்களின் வரலாறு அது. நாவலின் முடிவில் மகோன்டா என்னும் கிராமம் முற்றிலுமாக அழிந்து போகும். மக்கள் அங்கே வாழ்ந்து மறைந்ததற்கான சுவடுகள் ஒன்றுமே மிச்சமிருக்காது. இது என் கதை, என் நண்பரின் கதை, என் பரம்பரையின் கதை என்று அடையாளம் காண முடியும்.

**மருதன்**




GABRIEL GARCÍA MÁRQUEZ



ONE HUNDRED YEARS OF SOLITUDE



1982ல் மார்க்குவேஸ¬க்கு நோபல் பரிசு அளிக்கப்பட்டது. சட்டம் படிக்க முயன்று பாதியிலேயே நிறுத்திக் கொண்டு, எழுத்துப் பணிக்கு வந்து சேர்ந்தார் மார்க்குவேஸ். கொலம்பியாவின் அரசியல் நிலைமைகளை உன்னிப்பாகக் கவனித்து துணிச்சலுடன் பதிவுசெய்ய ஆரம்பித்தார். நூற்றாண்டு காலத் தனிமையை எழுத வேண்டும் என்று முதன்முதலாக பதினெட்டாவது வயதில் இவருக்குத் தோன்றியிருக்கிறது.

நூற்றாண்டு காலத் தனிமையின் வெற்றியை அதன் ஆசிரியரால் புரிந்துகொள்ள முடியவில்லை. தன் புத்தகத்தைப் பற்றி மார்க்குவேஸ் முன்வைத்த விமர்சனம் இதுவே. ''ஆஹா, ஓஹோ என்று உலகமே இந்தப் புத்தகத்தைக் கொண்டாடிக் கொண்டிருப்பது வேடிக்கையாக இருக்கிறது. எனக்கு நெருக்கமானவர்களைப் பற்றி சங்கேத மொழியில் இதில் நிறைய எழுதியிருக்கிறேன். அதை எடுத்து வைத்துக் கொண்டு, ஒவ்வோர் குறியீட்டுக்கும் வெவ்வேறு புதுப்புது அர்த்தங்களை அளித்து வியந்துகொண்டிருக்கிறார்கள் உலக விமர்சகர்கள்.'' ●

# காதைக் குடுங்க!

● தயாநிதி - அழகிரி சமாதான முயற்சி, இப்போது பலித்துவிட்டது. இந்த அதிவேக முயற்சிகள் பற்றி கனிமொழிக்குத் தெரியாது என்கிறார்கள். இந்த உடன்பாட்டுக்கு ஒருசில நாட்கள் முன்பு கூட, தயாநிதியைக் கொஞ்சம் கடுமையாகவே விமர்சித்து நெருங்கிய வட்டாரத்தில் கனிமொழி பேசி வந்ததாகச் சொல்கிறார்கள். இப்போது அவர் தனிமைப்படுத்தப்பட்டதாக வருத்தப்படுகிறாராம். இந்த நிலையில் சன் தொலைக்காட்சியிலிருந்து கலைஞர் தொலைக்காட்சிக்கு மாறிய 150 ஊழியர்கள், திடீர் சமாதானம் காரணமாகப் படபடப்போடு இருக்கிறார்கள். மத்திய அமைச்சர் ராஜா ஆடிப்போயிருக்கிறார். தயாநிதி மாறன் மீண்டும் தகவல் தொடர்புத் துறை அமைச்சராகி விடுகிறாரோ இல்லையோ, ஸ்பெக்ட்ரம் விவகாரம் அமுங்கிப் போகும் என்பது மற்றொரு எதிர்பார்ப்பு. ''இவர்கள் சேர்ந்து கொள்வார்கள், பிரிந்து போவார்கள். ஆனால் மதுரையில் தினகரன் அலுவலகம் எரிக்கப்பட்ட போது மூன்று ஊழியர்கள் இறந்து போனார்களே அவர்கள் ஆத்மா சாந்தி அடையுமா?'' என்று கேட்கிறார் தினகரன் ஊழியர் ஒருவர்.

● சேலத்தில் 33 குடும்பங்களைக் காலி செய்து நிலத்தை அபகரிக்க முயற்சி செய்ததாக, அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகத்தின் மேல் குற்றச்சாட்டு இருக்கிறது. இது தொடர்பாக சேலம் நீதிமன்றத்தில் வழக்கும் உண்டு. ''வழக்கை வாபஸ் வாங்குங்கள், பஞ்சாயத்து செய்து கொள்ளுங்கள்'' என்று வழக்கறிஞருக்கு, 'அன்பு' வேண்டுகோள்கள் வந்துள்ளன. இந்த நிலையில் உச்சநீதிமன்றத்துக்கு இந்த விவகாரத்தை எடுத்துப் போக இருக்கிறார் அந்த வழக்கறிஞர். இப்போது உடல்நலம் சரியில்லை என்ற அடிப்படையில் வீரபாண்டியார் இலாக்கா பறிக்கப்பட்டிருக்கிறது. வீரபாண்டியார் செல்வாக்கு சரிந்திருக்கும் இந்த நிலையைப் பயன்படுத்திக் கொண்டு, செல்வகணபதியின் செல்வாக்கை சேலம் தி.மு.க.வில் உயர்த்தவேண்டும் என்பது ஸ்டாலின் ஆசையாம்.

● தி.மு.க. உட்கட்சித் தேர்தலில் மூன்று, நான்கு முறை பொறுப்பில் இருந்த பழைய பெருச்சாளிகளே மீண்டும் மாவட்டச் செயலாளராக, 'தேர்தல்' நடந்த மாவட்டங்களில் வந்திருப்பது, இளைஞர் அணியினருக்கு எரிச்சலை ஏற்படுத்தியிருக்கிறது. குறிப்பாக ஆட்கடத்தல் குற்றச்சாட்டில், அமைச்சர் பொறுப்பை இழந்த என்.கே.பி. ராஜா, மீண்டும் மாவட்டச் செயலாளராக வந்திருப்பது கண்டு, மாவட்ட தி.மு.க. கடுப்பாய் இருக்கிறது. ''தளபதி மௌனமாக இருக்கிறார். ஒருவர் எந்தக் காரணம் கொண்டும் இருமுறைக்கு மேல் செயலாளராக இருக்கக்கூடாது என்ற விதி அமல்படுத்தப்பட வேண்டும்'' என்கிறார் இளைஞரணிப் பிரமுகர் ஒருவர்.

- ஸ்ரீநி



# ஆத்மா சாந்தி அடையுமா?

அஞ்சலி



# மனதில் நிற்கும் மண்டல் சிங்!

மறைந்த முன்னாள் பிரதமர் வி.பி.சிங்குடன் நெருங்கிப் பழகியவர் எழுத்தாளர் - பத்திரிகையாளர் ஞாநி.

''1987ல் மயிலை மாங்கொல்லைப் பகுதியில் நடந்த கூட்டத்தில்தான் முதன் முதலாக வி.பி.சிங்கின் பேச்சை மொழிபெயர்க்கும் வாய்ப்பு கிடைத்தது. அதன் பின் தமிழ்நாட்டில் அவர் பேசிய சுமார் நூறு கூட்டங்களில் அவரது தமிழ்க் குரலாக நான் இருந்தேன்.

வி.பி.சிங்கின் கிண்டல், நையாண்டி கலந்த ஆங்கிலப் பேச்சை, தமிழில் கொண்டு வருவது பெரிய சவால். நான் தமிழில் மொழிபெயர்க்கும்போது, சிரிப்பும், கைதட்டலும் வந்தால் மட்டுமே அவருக்கு மகிழ்ச்சியாக இருக்கும். நான் சரியாக மொழிபெயர்க்கிறேன் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்தது.

1988 தேர்தல் பிரசாரத்தின் போது டிரைவர் சீட்டருகே அமர்ந்திருந்த சிங், பின்னால் அமர்ந்திருந்த என்னிடம் ஒரு தாளை நீட்டி, 'இது சரியா?' என்று கேட்டார். வி.பி. என்பதை ஆங்கிலத்தில் எழுதி, 'சிங்' என்பதைத் தமிழில் எழுதியிருந்தார். 'எப்படி?' என்று கேட்டேன். சுவரொட்டிகளில் இருந்த தன் பெயரைப் பார்த்து எழுதக் கற்றுக் கொண்டதாகச் சொன்னார். நல்ல ஓவியர், கவிஞர். அணு விஞ்ஞானி ஆக வேண்டும் என்பது இவரது இளமைக் கனவாக இருந்தது. வினோபாவின் பூதான இயக்கத்துக்குத் தனது நூறு ஏக்கர் நிலத்தைக் கொடுத்திருக்கிறார்.

இரவு பகல் என்று சுற்றினாலும் களைப்படையாத அவரை, புற்றுநோயும், சிறுநீரகக் கோளாறும் தாக்கிய போது வேதனை கண்களில் பிரதிபலித்தது. சிறுநீரகங்கள் பழுதடையக் காரணம், மதவெறிக்கு எதிராக அவர் 1993ல் (மும்பை குண்டுவெடிப்புக்குப் பின்னர்) மேற்கொண்ட உண்ணாவிரதம்தான். 12 வருடங்கள், வாரம் மும்முறை டயாலிஸிஸ் செய்தே அவர் உயிர் வாழ வேண்டியிருந்தது.

மத்தியில் கூட்டாட்சி, மாநிலத்தில் சுயாட்சி என்ற ஃபெடரல் தத்துவத்தில் மெய்யான நம்பிக்கையுடன் இருந்த ஒரே ஹிந்து பிரதேசத் தலைவர் அவர்தான். அவர் பிரதமரான போது தி.மு.க. ஒரு இடத்திலும் ஜெயிக்கவில்லை. இருந்தும் முரசொலி மாறனை மத்திய மந்திரியாக்கினார். அது குறித்து ஜனதாதளம் கேட்டபோது, 'ஓரணியில் தேர்தலைச் சந்தித்த நிலையில், எல்லோருக்கும் ஆட்சியில் பிரதிநிதித்துவம் கொடுப்பது தான் உண்மையான கூட்டாட்சி' என்றார் சிங். கூட்டாட்சி, கூட்டணி இரண்டுக்கும் அதிமுக்கியமான இந்த அணுகுமுறையை மட்டும், கருணாநிதி சிங்கிடம் கற்றுக் கொள்ளவில்லை. ராஜீவ் கொல்லப்படுவதற்கு முன் நடந்த அத்தனை தேர்தல்களிலும் காங்கிரஸ் தோற்றது. கொலைக்குப் பின்னர் தான் ஆட்சியைப் பிடிக்கும் வாய்ப்பு அதற்குக் கிடைத்தது. ராஜீவ் கொலை நடந்திருக்காவிட்டால் சிங் மீண்டும் பிரதமராகி இருப்பார். நாட்டு அரசியல் வேறு திசையில் போயிருக்கும்.''

- சஞ்சயன்

# 'டயட்' ஒரு தப்பான

''ஒருவர் இளமையாகவே திகழ்வதற்கு அவர் சாப்பிடும் உணவு உதவிடுமா?'' என்ற கேள்வியோடு, சென்னையில் anti ageing கிளினிக் நடத்தி வரும் டாக்டர் கௌசல்யா வி.நாதனைச் சந்தித்தபோது, ''நிச்சயம் ஒருவர் சாப்பிடும் உணவு என்பது நேரிடையாகவே அவரவர்களது உடல் தன்மையை மாற்றிவிடக் கூடிய சக்தி பெற்றது. 'உணவே மருந்து. மருந்தே உணவு' என்ற மருத்துவ அறிஞர்களின் கூற்று நூறு சதவிகிதம் சரியே...

நம்மில் பலர் 'நான் 'டயட்'டில் இருக்கிறேன்' என்று கூறுவதை ரொம்பப் பெருமையான விஷயமாக நினைக்கிறார்கள். 'டயட்' என்கிற வார்த்தையே ஒரு தப்பான வார்த்தை என்றுதான் சொல்ல வேண்டும். அவரவர்களின் உடம்புக்கு எந்தெந்த உணவு வகைகள் ஒத்துக்கொள்ளுமோ, அதைச் சாப்பிட்டு வந்தாலே போதும். அதை விட்டுவிட்டு, ராம்ப் மாடல் போல ஆக வேண்டும். இந்தளவு இடுப்புதான் இருக்க வேண்டும் என ஏதோ ஒரு வற்புறுத்தலின்பேரில் சாப்பிடாமலேயே பட்டினி கிடப்பது தேவையே இல்லாத ஒன்று. நாம் எல்லோருமே தனித்தன்மை வாய்ந்தவர்கள். எல்லோருமே அழகானவர்கள்தான். சிலரிடம் என்பது சதவிகிதம் ப்ளஸ் பாயிண்ட்ஸ் இருக்கலாம். இருபது சதவிகிதம் மைனஸ் இருக்கலாம். ஆனால், மைனஸையே நினைத்து வேதனைப்பட்டு ப்ளஸ் பாயிண்ட்களையும் இழந்துவிடும் ஒரு அவலமான செயலைத்தான் பலர் அறியாமையால் செய்து வருகிறார்கள்.

* கௌசல்யா வி. நாதன்

நம் உடல், மனம் மற்றும் எண்ணத்தோடு சம்பந்தப்பட்டது நாம் உட்கொள்ளும் உணவு. ஏதாவது ஒரு சந்தோஷமான நிகழ்வு என்றால், உடனே அதைப் பகிர்ந்து கொள்ள விருந்து அளிப்பது மாதிரி, ஒரு துக்க



மான நிகழ்வு நேர்ந்தால் உடனேயே சாப்பிடா மல் இருந்து விடுவோம். ஒருவர் சாப்பிடும் உணவை வைத்தே அவர் எப்படிப்பட்ட தன்மை வாய்ந்தவர் என்பதையும் சொல்லி விட முடியும். மனச்சோர்வால் பாதிக்கப்பட்ட வர்கள், ஒன்று எக்கச்சக்கமாக சாப்பிடுவார் கள். இல்லையென்றால் ஒரேயடியாக சாப்பிடா மலேயே இருந்து விடுவார்கள். நம் இந்தியத் தாய்மார்களின் மன நிலையே எப்படி என் றால், ''எம் பிள்ளை இன்னைக்குப் பத்து இட்லி சாப்பிட்டான். எனக்கு இப்பதான் திருப்தியா இருக்கு'' என திருப்திப்பட்டுக் கொள்வார்கள்... இதே அவன் இரண்டோ, மூன்றோ இட்லி களோடு எழுந்துவிட்டால், ''எம்புள்ள இன்னிக்கு சரியாவே சாப்பிடல'' என பொருமிக்கொண்டே இருப் பார்கள். அதிக அளவு உணவு சாப்பிட்டால்தான் ஆரோக்கியம் என்பது கிடை யவே கிடையாது.

தேவையே இல்லா மல் பிஸாவையும், நூடுல்ஸையும் நுழைய வைத்து விட் டோம். பிஸா சாப்பிடுவதற்குப் பதில் கடலை, பொரி, சுண்டல், பாப்கார்ன் சாப்பிடலாம். நூடுல்ஸ் சமைக்க எடுத்துக்கொள்ளும் அதே இரண்டு, மூன்று நிமிடங்கள்தான் அவல் உப் புமா, ரவை உப்புமா செய்யத் தேவைப்படும். பின் ஏன் தேவையே இல்லாமல் நூடுல்ஸ் பக்கம் போக வேண்டும். அதிகளவு உப்பு, கொழுப்பு இவைகளை உட்கொள்வதால்தான் சீக்கிரமே வயதானவர்களைப் போன்ற தோற் றம், 30 வயதுக்குள் ஹார்ட் அட்டாக், 25 வயதுக்குள்ளேயே டயா படீஸ் என ஏதேதோ வந்து எட்டிப் பார்க்கிறது.

இரவு உணவு என்பது ரொட்டி, சாலட், சூப் இப்படி இருக்கவேண்டும். காலை


* பொரி


* கொண்டை கடலை

# வார்த்தை

காலை உணவு முதல் இரவு டின்னர் வரை நம் உடல் வாகுக்கும், உடல் உழைப்புக்கும் தேவையான உணவு வகைகளைத்தான் உட் கொள்ள வேண்டும். இந்தக் காலத்தில் உடல் உழைப்பு என்பது சுத்தமாக இல்லை. எல் லாமே brain work என்பதால், காலை இட்லி, தோசை அல்லது பொங்கலோடு நல்ல காய்கறி கள், கீரை வகைகள் சேர்த்துச் செய்யப்பட்ட சாம்பார், சட்னி வகைகளை எடுத்துக் கொள் ளலாம். மதியம் பாலிஷ்ட் அரிசியால் சமைக் கப்பட்ட சாதத்தை எடுத்துக் கொள்வதை விட்டுவிட்டு, கைக்குத்தல் அரிசியால் சமைக் கப்பட்ட சாதத்துக்கு மாற வேண்டும். கூடவே கூட்டு, ரசம், மோர் சாப்பிட வேண்டும்.

அதைப் போலவே நம் வீடுகளில் நாம்

யில் வடை செய்த எண்ணெயிலேயே மதியம் பூரி, பின் ராத்திரி அதிலேயே அப்பளம் பொரிப்பது என எண்ணெயை re use செய்து கொண்டே இருக்கக்கூடாது. அதைப் போலவே பல தாய்மார்கள், சமைத்த உணவு வேஸ்டாகுதேன்னு சாப்பிட்டேன்னு தேவையே இல்லாமல் உண்பதைத் தவிர்க்க வேண்டும். மொத்தத்தில் அளவோடு சத்தான உணவு உண்டால், என்றென்றும் மாறாத இளமையோடும், அழகோடும் இருப்போம்'' என்கிறார்.

– நளினி சம்பத்குமார்

கௌசல்யா வி. நாதன்

# எனக்குப் பெண் குழந்தை பிறந்திருக்கிறது

கதை

எனக்குப் பெண் குழந்தை பிறந்த பொழுதிலிருந்து அவளோடு இருக்கிறேன். புத்தம் புதிய ரோஜா இதழ்களின் மூட்டையாய் சிரிக்கிறாள். குவிந்த உதடும் விழிகளும் அவள் அம்மாவைப் போலிருக்கின்றன என்கிறது உறவுக்கூட்டம். என் நிறத்தில் இல்லை என்பதில் மிகுந்த சந்தோஷம் என்கிறாள் மனைவி.

என் மகளைத் தூக்கிச் சுமக்கையில் மார்பில் ஊறும் கனிவுக்கு என்ன பேர் என்றே தெரியவில்லை. வாடிய பூவாய் இருக்கும் சாருவின் முகத்தில் தெரியும் அந்த அழகுக்கு, தாய்மை என்பதைவிடப் பொருத்தமானதாய் எதுவும் இருக்கவே முடியாது. அவள் கண்கள் என்னிடம் பேசுகையில், என்னால் தூரத்தே நின்று உடம்பு எப்படி இருக்கிறது என்று ஒப்புக்காய் தலையாட்ட முடியவில்லை.

என் சாருவை அப்படியே தூக்கி எடுத்து நெற்றியில் முத்தமிட்டு, உடம்பெல்லாம் முத்தங்களால் ஆறுதல் சொல்ல துடித்துக் கொண்டிருக்கிறேன். உறவுகளின் கூட்டம் குறுக்கும் மறுக்குமாய் தொல்லையேற்றியபடி இருக்கிறது.

தகப்பனாகிவிட்டேன் என்பதில் எனக்குள் ஏதோ மாற்றம் நிகழ்ந்திருக்கிறது. காதலும், காமமுமான என் வாழ்வின் ஆதாரம், என் வித்து என்பதில் மனசுக்குள் இறக்கை முளைத்து சிறகடிக்கிறது. நர்சுகள், ஆயாக்கள் என்று காண்கிறவர்களிடமெல்லாம் பணத்தை வாரியிறைத்தபடி இருந்தேன். மாமனாருக்கு இன்னும் என் மேலான கோபம் தீராமலிருக்கலாம். முகம் சுளித்தபடி என் நடவடிக்கைகளைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

''பொண்ணு பெத்திட்டேடி... இனிமேலாச்சும் ஏதாச்சும் சேர்த்து வைக்கச் சொல்லு உன் வீட்டுக்காரரை... புத்தகம், இலக்கியம்னு இருந்தா வர்ற மாப்பிள்ளை, உங்க பக்கம்கூட தலை வெச்சுப் படுக்கமாட்டான்'' என்கிற அறிவுரைகள், என் காதில் விழ வேண்டும் என்பதற்காய் மனைவியிடம் கூறப்பட்டுக்கொண்டிருந்தன.

எல்லோரையும் விரட்டி விடலாம் என்றிருக்கிறது. சாரு என் தவிப்பை உணர்ந்தவளாய், அருகில் அழைத்தாள்.

''இன்னும் மூணு நாளைக்குப் பொறுத்துக்கங்க. நம்ம வீட்டுக்குப் போயிடலாம் தங்கம்'' என்றாள். என் குழந்தை, என் செல்லக்குழந்தை, அடம்பிடிக்கிற குழந்தைக்கு இன்னொரு குழந்தை. சிரித்தபடி இருந்தேன். தலையைச் செல்லமாய் கோதி நிற்கையில் டாக்டர் ரேவதி உள்ளே வந்தார். ''என்ன மிஸ்டர் ரமேஷ் வொய்ஃபை விட்டுப் போக மனசு வரலையா? இன்னொரு ரூம் புக் பண்ணிக்கோங்க. ஒரு ரூம் முழுக்க உங்க ஆளுங்களா இருக்காங்க...''

'ஹாஸ்பிட்டல் ரூல்ஸ் ஃபாலோ பண்ணுங்க' என்கிறாள்.

''ஷ்யூர் மேடம் பணம் கட்டிடுறேன்''

என்கிறேன்.

''இன்னும் எத்தனை நாளைக்கு டாக்டர் ஹாஸ்பிட்டல்ல இருக்கணும்? நான் எப்போ கூப்பிட்டுப் போகலாம்?''

''ஸ்ஸ் என்ன மிஸ்டர் ரமேஷ்... இவ்ளோ அவசரப்படுறீங்க? உங்க வொய்ஃப் உடம்பைப் பாருங்க. எவ்ளோ சிக்கலான பிரசவம் இது. இன்னும் ஒரு வாரமாவது அவங்க இங்கே இருக்கணும்'' என்றாள்.

என் மாமனார் உள்ளே வந்தார். என் சாருவிடம், ''சாரும்மா நம்ம வீட்டுக்குப் போயிடலாம். உன்னால சமைக்க எல்லாம் முடியாது இப்போதைக்கு. இன்னும் ரெண்டு மூணு மாசத்துக்காச்சும் நம்ம வீட்டோட இருந்து, நல்லா சாப்பிட்டாதான் நீ உடம்பு தேறி வருவ. பொண்ணு பெத்திருக்கேம்மா. அம்மா இல்லாதவ நீ. கொழந்தையும் இவ்ளோ வீக்கா இருக்கா பாரு'' என்றார்.

என் ஏக்கம் என் மனைவிக்கு மிக நன்றாய்த் தெரியும் என்பதால், 'இல்லப்பா நான் பாத்துக்கிறேன். அவர் என்னை நல்லா பாத்துப்பார்' என்கிற பதிலை எதிர்பார்த்துக் காத்திருந்தேன்.

என்னை ஓரக் கண்ணால் பார்த்தபடி, ''ஓகே டாடி, டாக்டர் கிட்ட கன்சல்ட் பண்ணுங்க. என்னைக்கு வீட்டுக்குப் போகலாம்னு, நாம போகலாம்'' என்றாள்.

மாமனார் வெற்றிப் புன்னகையுடன் என்னைக் கேவலமாகப் பார்த்தபடி வெளியேறினார்.

என் புன்னகை முழுக்க வடிந்திருந்தது. இருந்தும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் சிரித்தபடி, ''குட்டி உடம்பைப் பாத்துக்கோடா, பாப்பாவை நான் தினமும் வந்து பாக்கலாம்தானே'' என்றேன்.

அவளுக்குப் புரிந்திருக்க வேண்டும். என் முகம் நோக்காமல், ''சே என்னப்பா நீ... எவ்ளோ நாளைக்கு அப்புறமா என் டாடி வீட்டுக்குக் கூப்பிடுறார், அதும் இல்லாம எனக்குக் கொழந்தைய எப்படித் தூக்கணும். பாத்துக்கணும்னு கூடத் தெரியாது'' என்றாள்.

வாய் வரை வந்துவிட்ட வார்த்தைகளைச் சொல்லிவிட்டேன், ''என் அம்மா வர்றேன்னு சொன்னாங்க'' என்று.



''ஓ சரி.. வந்த உடனே எங்க வீட்டில கொண்டு வந்துவிடு. நான் சூப்பரா பாத்துக்கிறேன்'' என்றாள்.

ஒரு நிமிடம் என் அம்மாவின் கோபம் வந்து போனது. 'கொண்டான் கொடுத் தான் வீட்டுல போயி உக்கார்ந்து திங்க நான் ஒண்ணும் சோத்துக்கு இல்லாதவ இல்லடா.

கல்யாணம்தான் முறைப்படி ஆகல, பிள்ளைப்பேறு, பேத்தின்னு நான் பக்கத்துல இருந்து பாத்துக்கணும்னுதான் இம்மாம் தொலைவு வர்றேன்னு சொன்னேன்' என்பாள்.

ஏதும் சொல்ல முடியாமல் ''சரி'' என் றேன். மீண்டும் உள் நுழைந்த மாமனார், வெற்றிப் பெருமிதத்துடன், ''பேசிட் டேன்மா, இன்னைக்கு சாயந்திரமே போகலாமாம், நம்ம வீட்டுக்குப் பக்கத் தில அவங்க கிளினிக் ஒண்ணு இருக்காம், அவங்களே நர்ஸை அனுப்பி டெய்லி இஞ்செக்ஷன் எல்லாம் போட்டுடறாங் களாம். என்ன எல்லாத்துக்கும் பணம்தான் வேணும்'' என்றார்.

அவருக்கு என் மேலான ஆத்திரத்தைத் தணிக்க மிக நல்ல சந்தர்ப்பம் இதுதான். தான் எவ்வளவோ தடுத்தும் தன்னைத் தூக்கி எறிந்து மகளைத் திருமணம் செய்து கொண்டவன், எந்த விதத்திலும் தனக்கு சமமானவனாயில்லாது போனதும், உறவுக்காரர்களின் கேவலப் பேச்சுகளும் அவரை இந்த நிலைக்குப் பழி வாங்கிடத் தள்ளியிருக்கின்றன.

நான் நின்று கொண்டேயிருந்தேன். அந்த அறையில் நான் இருப்பதற்கான நிகழ்வே இல்லாதவாறு அவர் பேசிக் கொண்டிருந்தார். என் மனைவியின் முகத்தில் தவிப்பும், இரக்கமும் மாறி மாறி வந்தபடி இருந்தன.

மிகத் தெளிவாகப் புரிந்தது. மகளைப் பிரிந்த நாட்களின் கதைகளை அவர் சுவாரசியமாக அல்லது என்னை விலக்கி பேச்சில் அவளை மட்டும் பங்கு கொள்ள வைக்க எனப் பல யுக்திகளுடன் பேச்சை வளர்த்துக் கொண்டிருந்தார்.

மெதுவாய் என் மனைவி அழைத்தாள்.

''அதான் டாடி வந்திட்டாரு இல் லைப்பா. அவர் பார்த்துப்பார், நீங்க கொஞ்சம் நம்ம ஃபிளாட்டுக்கு போயிட்டு, என் ட்ரெஸ் கொஞ்சம் உங்க பெரிய பேக்ல வெச்சு எடுத்திட்டு வந்து கொடுத்திட்டுப் போங்க'' என்றாள்.



**புதுச்சேரி 1916-ல்** புயல் தாக்கி சேத முற்றபோது, எல் லோரும் மனித துய ரங்களுக்கு உதவிக் கொண்டிருந்தார் கள். பாரதி தன் தோழனோடு புதுச்சேரி வீதிகளில் பயணப்பட்டு புயலால் அனாதையாகச் செத்து கிடந்த குருவிகளை, காகங்களை ஒவ்வொன்றாகத் தேடிச் சேகரித்து, அவற்றுக்கு மனித அந்தஸ்து கொடுத்து

**புதுக் கவிதைக்குட்**

ஒரு தலையாட்டலும் சிரிப்புமாய் நகர்ந் தேன். வேறேதும் செய்ய மனமில்லாது போயிற்று.

செல்ஃபோனின் ஓசை கவனம் கலைத்தது. வரிசையாய் வாழ்த்துச் செய்தி கள், அழைப்புகள், பார்ட்டி கேள்விகள்... நான் மிக மெதுவாய் தொலைந்து கொண் டிருந்தேன்.

என் மகள் மாமனாரைத் துரத்திவிட்டு வந்தமர்ந்து கொண்டாள். மீண்டும் தரை யில் கால்படாமல், வானம் இடித்து நடக் கத்துவங்கினேன். என் பெண், என் உயிர்...

மகிழ்ச்சியை இன்னதென்று வெளிக் காட்ட இயலவில்லை. பார்க்கிங்கில் பைக் எடுக்கையில் ''சார் பார்க்கிங் அஞ்சு ரூபா தராம போயிட்ட சார்'' என்றவனைத் திரும்பிப் பார்த்தேன்.

''சாரிப்பா வொய்ஃப்புக்கு பிரசவம்பா. அதான் அவசரத்துல போயிட்டேன்'' என்றேன். ''பரவால்ல சார், கொழந்தை பொறந்தாச்சா சார்?'' என்றான். ''ஆமாம்பா பொண்ணு பொறந்திருக்கா'' என்றேன்.

மண்ணில் புதைத்தான். அதனால்தான் 'காக்கை குருவி எங்கள் சாதி' என்று அவனால் எழுத முடிந்தது. அவன் எழுத்துக்கும் வாழ்க்கைக்கும் இடைவெளி அற்றவன். இந்த இலக்கணம் தான் அவனை மகாகவியாக மாற்றியது. அந்தப் புதுக்கவிதை டிசம்பர் 11-ல் பூத்து, தமிழ் மணக்க வைத்தது.

- எழுத்தாளர் பிரபஞ்சன் (ஒரு இலக்கியக் கூட்டத்தில்)



...றந்தநாள்

என் முகம்கொள்ளா சிரிப்பு அவனையும் தொற்றிக் கொண்டது. ''பொண்ணுதான் சார் மகாலெச்சுமி, வூடு நிறைஞ்சி போவும் சார்'' என்றபடி, ''சார் டீக்கு எதுனா கொடு சார்'' என்றான்.

இருபது ரூபாய்த் தாளை நீட்டியபடி வண்டியை நகர்த்தினேன்.

**மி**க மெலிதாய் கண் திறந்தேன், பின் மண்டை உடைந்திருக்க வேண்டும் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லாமல் ரத்தம் வழிந்திருந்தது முதுகிலெல்லாம். பற்கள் குத்தி உதடு கிழிந்திருந்ததை உணர முடிகிறது. பைக் எதில் மோதியது என்றுதான் தெரியவில்லை.

பக்கத்தில் கூடிய கூட்டத்தின் வாயிலாய், ''ஷேர் ஆட்டோ சார், பின்னாடி வந்த ஸ்பீடுக்குத் தட்டிட்டான் சார், அப்படியே பறந்து போயி போஸ்ட்ல அடிச்சு விழுந்தார் சார்'' என்கிற விவரணைகள்.

''ரமேஷ் நீ இருபது வருஷம் பின்னாடி இருக்கேடா. லவ் பண்றேன்னு சொன்னா கல்யாணம் பண்ணிக்கணும்னு யோசிக்கிறது என்னடா மெண்டாலிட்டி. நான் உனக்காக இருக்கேன். ஜஸ்ட் பீ தேர் ஃபார் யு. இதுல என்னடா கஷ்டம் உனக்கு, விட்டுட்டுப் போறேன்னா சொன்னேன். இல்லை உன்னை ஏமாத்திட்டுப் போயிட்டேனா? ஃபீல் பண்ற. ஒரு பொண்ணு இல்லாட்டி வாழ்க்கையே இல்லன்னு சொல்றதெல்லாம் சுத்த ஹம்பக், கர்நாடகம்டா, மூஞ்சியக் கழுவிட்டுப் போயிட்டே இரு. எல்லாம் கடந்து போகும். என்னோட இருந்த சந்தோஷ நாட்களை ஞாபகம் வெச்சுக்கோ. இப்பவும் நான் உன்னை லவ் பண்றேன்டா. லவ் மட்டும்தான் பண்றேன்' என்று கூறி விடைபெற்றுச் சென்றுவிட்ட சாரு சன்னமாக நினைவுத் திரைக்குள் வந்தாள்.

அவள் என்னை விட்டு எந்தக் காரணமுமின்றிப் பிரிய நேர்ந்தது உயிர் வலி. ஏதேனும் புதிய புதிய கற்பனைகளால்தான் அந்தத் துயரத்தை, வலியைத் துரத்தி அடிக்கிறேன். அவளும் நானும் பிரசவ ஆஸ்பத்திரியில்... என்னை உயிர்ப்பாக உணர வைத்த அந்த அழகான கற்பனையின்போதுதான் இந்த உயிர்ப் பறிப்பா?

எனக்கு இன்னும் உயிர் போகவில்லை என்பது புரிந்து, வலி மரத்துப் போய் விட்டிருந்தது.

''ஃப்ராங்க்ஃபின் இன்ஸ்டிடியூட் ஆஃப் ஏர்ஹோஸ்டஸ் டிரெய்னிங்' வளாகத்துக்குள் நாம் அடியெடுத்து வைத்த நேரம், விண்ணை எட்டப் போகும் உற்சாகத்துடனும், துடிதுடிப்புடனும் 'வான' பாடம் பயின்று கொண்டிருந்தார்கள் அதன் மாணவ, மாணவிகள்.

''ஏர்-ஹோஸ்டஸ் வேலைன்னா, என்ன சும்மாவா? எப்பவும் சிரிச்சுக்கிட்டே இருக்கணும். விமானப் பயணிகள் திட்டினாலும் சரி, கோபப்பட்டாலும் சரி, எங்க உதட்டோர ட்ரேட் மார்க் புன்னகையை மட்டும் நாங்க விட்டுடவே கூடாது'' என ஆரம்பித்த மெர்ஸியை இடைமறித்து, ''என்ன புன்னகையைப் பத்தி மட்டுமே பேசறீங்க? கிளாஸுக்கு வரும்பொழுது கூட டிப்டிப்னா பெயிண்ட்டோடவே



வர்றீங்களே அதெல்லாம் எங்க போய் சொல்றது?'' என கேள்விக்கணைகள் தொடுத்தார் நந்தகிஷோர்.

''ஹே என்ன விளையாடறீங்களா? சும்மா முகத்துக்கு இத்தனூண்டே இத்த னூண்டு பவுடர் போட்டுக்கறோம். அதைப் போய் ஒரேயடியா பெயின்ட்னு சொல்றீங்க. ஆனாலும் இது ரொம்ப ஓவர்'' என்ற மெர்ஸியிடம், ''கன்னத்துல



பிங் பெயின்ட், கண்ணுக்கு கறுப்பு பெயின்ட், சில சமயம் அது அப்படியே நெத்திலேர்ந்து நேரா தலைக்குப் போய் பிரவுன் பெயிண்டா கூட மாறிடும். இவங்க எதுக்கு லிப்ஸ்டிக் போடறாங் கன்னு நினைக்கறீங்க! சமயத்துல, சாப்பிட எதுவுமே கிடைக்கலேன்னா, லிப்ஸ்டிக் தான் லஞ்சாவே மாறிடும். தெரியுமோ உங் களுக்கு?'' என்று அபிநயித்தார் சாக்லேட் பாய் ஆனந்த்.

''ஏ, லஞ்ச்னதும் எனக்கு ஒரு சூப்பரான சம்பவம் ஞாபகத்துக்கு வருது.

நான் முதன் முதலா தனியா மலேஷியா போகறதுக்காக வீட்லேர்ந்து ஏர்போர்ட் கிளம்பும்பொழுது, எங்க பாட்டி, 'ஏன் கண்ணு தனியா விமானத்துல பறக்கப் போற? இந்தா இந்த டிஃபன்பாக்ஸை

# வானம்பாடிகளின் வகுப்பறையில்...

முதல்ல எடுத்துட்டுப் போ'ன்னு சொல்லி தயிர்சாதம் பேக் பண்ணி குடுத்தாங்க. 'அதெல்லாம் ஒண்ணும் வேணாம். ஃப்ளைட்ல சாப்பாடெல்லாம் குடுப்



பாங்க'ன்னு நான் சொன்னதும், 'அப்படியா, அப்ப எனக்கும் ஃப்ளைட் சாப்பாடு கொண்டு வா கட்டாயமா'ன்னு பாட்டி ஆசையோடு, ஆசி பண்ணி அனுப்பினாங்க. எனக்கோ ஃப்ளைட் டேக் ஆஃப் ஆனதுமே ரொம்பப் பயமாப் போச்சு. அழுதுக்கிட்டே இருந்தேன். ஏர்ஹோஸ்டஸ் மேடம் வந்து, 'பயப்படாதம்மா, ஜன்னல் வழியா வெளில பார்த்துட்டே இரு'ன்னு சொன்னாங்க. நைட் நேரத்துல வெளில ஒரே கும்மிருட்டு. என்னத்த வேடிக்கை பார்க்கறது? ஒருவழியா பத்திரமா மலேசியா போய்ட்டுத் திரும்பவும் சென்னைக்கு வந்து சேர்ந்தப்புறம்தான் உயிரே வந்தது'' என்ற கௌதமிராயிடம், ''அப்ப பாட்டிக்கு ஃப்ளைட் சாப்பாடு?'' என நாம் அப்பாவியாய்க் கேள்வி எழுப்ப, ''சாப்பாடாவது, கூப்பாடாவது'' என்று ஐஸ்வர்யாராயின் தங்கச்சி என சக தோழர்களால் அழைக்கப்படும் கௌதமிராய் சொல்லி முடித்தார்.

''இது எங்க மேம்க்கு நடந்தது. ஆனா இது நமக்குள்ள யாருக்கு வேண்டுமானாலும் நடக்கலாம். கவனமா பாருங்க. எப்போதுமே ஃப்ளைட் டேக்-ஆஃப் ஆகறதுக்கு முன்னால, சீட் பெல்ட் எப்படிப் போடணும், லைஃப் ஜாக்கெட் எப்படிப் போடணும்னு விளக்குவோம். ஒருமுறை அப்படித்தாங்க எங்க மேம் ஏர்-ஹோஸ்டஸ் ஆக இருந்தபொழுது லைஃப் ஜாக்கெட் எப்படிப் போடணும்னு சொல்லிக்கிட்டிருந்தாங்களா...'' என்ற கார்த்திகாவை, ''அப்புறம் ஃப்ளைட் கொஞ்ச நேரத்துல எப்படி விழும்னு சொன்னாங்களா?'' என்று குறுக்கிட்ட தாராசந்திடம், ''ஏய், நான் சீரியஸா சொல்லிக்கிட்டுக்கிருக்கேன்ல'' என்று தொடர்ந்தார் கார்த்திகா. ''லைஃப் ஜாக்கெட் எப்படிப் போடணும்னு இவங்க சொல்லிக் கொடுத்துக்கிட்டு இருக்கும்பொழுதே எல்லாப் பயணிகளும் மங்களகரமா அந்த மஞ்சள் கலர் ஜாக்கெட்ல காத்த ஊதி போட்டுக்கிட்டாங்களாம். உயிர் காக்க லைஃப் ஜாக்கட் போடணும்னு சொன்னா, என்னடா இவங்க உயிரைப் போக்கவே லைஃப் ஜாக்கெட் மாட்டிக்கிட்டிருக்காங்க போலிருக்கேன்னு எங்க மேடம் பயந்துட்டாங்களாம்'' என்று ஒருவிதத் திகிலுடனேயே சொல்லி முடித்த கார்த்திகாவை, ''ஹலோ, முக்கியமான மேட்டரை மறந்துட்டீங்களே... ஏர்-ஹோஸ்டஸ் யாருமே அவங்களோட உண்மையான பேரை பாட்ஜ்ல போட்டுக்க மாட்டாங்க. அத முதல்ல கவனிங்க. இவங்ககிட்ட யாராவது ஃபோன் நம்பர், ஈமெயில் ஐடி குடுங்கன்னு கேட்டா கூட, 'நீங்க உங்க நம்பரைக் கொடுங்க, வி வில் கால் யூ'ன்னு சிரிச்சுக்கிட்டே நம்பறா மாதிரி சொல்லிடுவாங்க. நாங்கள்லாம் அப்படிக் கிடையாதுப்பா, உண்மை விளம்பிகள். எங்களுக்குப் பொய் சொல்லவே தெரியாது. எங்க பேரு, அட்ரஸ்ன்னு எல்லாம் எழுதி தனியாவே ஒரு பாட்ஜ் தயார் பண்ணி மாட்டிப்போம்'' என கார்த்திக் கலாய்க்க ஆரம்பிக்க, சந்தோஷமும் கலாட்டாவும் அங்கே டிசம்பர் இசை விழாவுக்கென கைகோத்துக் கொண்டு கச்சேரி செய்தன.

**- நளினி சம்பத்குமார்**

படங்கள் : **குமார்**

# நாரதருக்கு வயசு நூறு!

கலைநிகழ்ச்சிக்கான திரை விலக இன்னும் சில நொடிகளே. ''அவர் வந்து விட்டாரா?'', ''வந்து விட்டாரா?'' எனப் பரபரக்கும் கலைஞர்கள். 'படபட'வென மோட்டார் சைக்கிள் சத்தம். அதோ வந்தே விட்டார். வெள்ளை வெளேர் என்ற வேட்டி, ஜிப்பா, நெற்றியில் குங்குமம், காதுகளில் பளீரிடும் வைரக் கடுக்கன்கள், தோளிலே உயர்ரக கேமரா என வேக வேகமாக வந்து அவர் முதல் வரிசையில் அமர்ந்ததும், கலைஞர்கள் முகத்தில் திருப்தி, மனமகிழ்ச்சி. அப்படி ஒரு நட்சத்திர அந்தஸ்தும், செல்வாக்கும் பெற்றிருந்த பத்திரிகையாளர், ஆசிரியர் நாரதர் ஸ்ரீநிவாஸராவ்.

சங்கீதம், நடனம், நாடகம், சினிமா என அனைத்துலகக் கலைஞர்களும் ஊக்கமும் உற்சாகமும் மட்டுமின்றி பல வாய்ப்புகள் பெறவும் உதவியவர்.

1908 ஜூலை மாதம், திருநெல்வேலி மாவட்டம் சேரன்மகாதேவி கிராமத்தில் பிறந்த ஸ்ரீநிவாஸராவ், பட்டம் பெற்ற கையோடு, பையில் முப்பது ரூபாயோடும், மனத்தில் தன்னம்பிக்கையோடும் அறிமுகம் இல்லாத சென்னையில் காலடி எடுத்து வைத்தார். காங்கிரஸ் இதழ் மற்றும் விகடக்கடல் பத்திரிகைகளின் உதவி ஆசிரியரானார். கல்கி கிருஷ்ணமூர்த்தியால் அழைக்கப்பட்டு ஆனந்த விகடனில் பணியேற்றார். அப்போது விகடனில் பணிபுரிந்த ஆறு பேரில் இவரும் ஒருவர்.



* கலைமாமணி விருது பெறும் ஸ்ரீநிவாஸராவ்...

1933ல் ஆனந்த விகடனின் சகோதரப் பத்திரிகையாக உருவான நாரதர் பத்திரிகைக்கு, ஸ்ரீநிவாஸராவ் பொறுப்பாசிரியராக நியமிக்கப்பட்டார். நாரதர் பட்டம் உடன் சேர்ந்து கொண்டது. 25 வருடங்கள் சேவை செய்து பெயரும், புகழும் பெற்றார்.

நாரதர் பத்திரிகை 'ஒன் மேன் ஷோ'! வரிக்கு வரி நாரதரே எழுதினார். தொடர் கதைகள், சிறுகதைகள், நகைச்சுவை, பயணக் கட்டுரைகள், பாலர் பக்கம், கலை விமர்சனங்கள், தலையங்கங்கள் என எதையும் விட்டு வைக்கவில்லை. ஃபோட்டோ ராவுஜி என்ற பெயரில் புகைப்படமும் இவரே எடுத்தார்.

நாரதரின் சரஸா நாடகம் நாடு முழுவதும் 100 நாட்கள் அரங்கேறியது. கதை, வசனம், பாடல்கள், டைரக்ஷன் இவற்றோடு கதாநாயக வேடத்தில் நடித்தும் அசத்துவார். சிறந்த அமெச்சூர் நாடக நடிகர் என்பதற்காகத் தமிழக அரசின் கலைமாமணி விருது பெற்றவர்.

1974ம் ஆண்டு இயற்கை எய்தினார் நாரதர் ஸ்ரீநிவாஸராவ். நூறு வருடங்களுக்குப் பிறகும் ஒரு மனிதனின் நினைவு உயிர்ப்போடு இருக்கிறது எனில், அம்மனிதனின் வாழ்க்கைப் பயணம் உன்னதம் என்றுதானே பொருள்.

– மங்களா சக்ரபாணி ராவ்



''இந்த சாமியாருக்கு டி.வி. மோகம் அதிகமாக இருக்கு!''

''எப்படிச் சொல்றே?''

''ஆசிரமத்துக்கு திறமையான 'கிரியேட்டிவ் ஹெட்' வேணும்னு அறிவிப்பு குடுத்துருக்காரே!'

- அம்பை தேவா



''குடும்ப அரசியலைப் பத்தி தலைவர் என்ன சொல்றார்?''

''வீடு நல்லா இருந்தால்தான் நாடு நல்லா இருக்குமாம்.''

- அதிரை புகாரி



''எனக்கு ஞாபகமறதி அதிகமாயிடுச்சு டாக்டர். மருந்துச் சீட்டை லெபாரட்டரில காட்டறேன், லெபாரட்டரி ரிசல்ட்டை பார்மஸில காட்டறேன்...''

''இதை ஏண்டா என்கிட்டே சொல்றே, நான் உன் அப்பாடா!''

- வெ. சீதாராமன்

# தாத்தா அணித் தலைவர்!



''இளைஞர் அணித் தலைவர் எதுக்கு கடுப்புல இருக்கார்?''

''மீட்டிங்ல ஒரு குழந்தைக்குப் பெயர் வைக்கறப்ப 'தாத்தா'னு கத்திடுச்சாம்!''

- அம்பை தேவா



''ஐந்தாவது முறையா என்னோட கல்யாணம் நின்னு போச்சுன்னு சொன்னா, ஏன் இப்படி ஆச்சரியமா பார்க்கறே..?''

''உனக்கு மட்டும் எப்படி, இப்படி தானா நல்லது நடக்குது...?''

- கே. ஆனந்தன்



''ஆபரேஷன் தியேட்டர்ல இருந்து ஏன் டாக்டர் பேயறைஞ்ச மாதிரி வர்றார்?''

''அவர் ஆபரேஷன் பண்ண பேஷண்ட் எழுந்திருச்சு உட்கார்ந்துட்டாராம்!''

- தென்றல் சண்முகசுந்தரம்

## 07.12.08 முதல் 13.12.08 வரை

**மேஷம்:** சுகமான வாரம். பணக்கஷ்டம் இருக்காது. கல்வி வளம் மேலோங்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. வியா பாரத்தில் நல்ல அபிவிருத்தி இருக்கும். உத்தியோகத்தில் இடம் மாற்றம் உண்டா கும். புதிய சொத்து வாங்க உகந்த காலம். ராகு/கேது/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**ரிஷபம்:** நினைத்த காரியம் வெற்றி பெறும். தடை விலகித் திருமணம் கைகூடும். தொழில் வழியில் இட மாற் றம்செய்ய வேண்டி இருக்கும். கடன் சுமை யிலிருந்து விடுபட நேரிடும். உத்தியோ கத்தில் வேலைப் பளு குறையும். புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். குரு/ சனி வழிபாடு செய்துவர நற்பலன் அளிக்கும்.

**மிதுனம்:** படிப்பில் அக்கறை எடுத்துப் படிக்கவும். கூட்டாளிகளைத் தவிர்ப்பது நல்லது. புதிய தொழில்முயற்சியைத் தள்ளிப் போடவும். வாகனங்களில் செல் லும்போது உஷார். தொழில் ஸ்தானத்தில் மந்தமான சூழ்நிலை காணப்படும். வேலைப் பளு அதிகரிக்கும். ராகு/கேது/ குரு வழிபாடு செய்து வரவும்.

**கடகம்:** மனக் குழப்பம் தீரும். கல்வி யில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வழக்கு வெற்றி அளிக்கும். பண வருவாய் பெருகும். உடல் ஆரோக்கியம் சீராகும். உத்தியோகத்தில் இட மாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் இருந்து வந்த மந்தநிலை சீராகும். ராகு/கேது/ சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**சிம்மம்:** மறைமுக எதிர்ப் புகள் அதிகரிக்கும். யாரிடமும் பேச்சுவார்த்தை வைத்துக் கொள்ளக்கூடாது. உடல் ஆரோக்கியத்தில் கவனமாக இருப்பது நல்லது. எதிர்பாராத பிரயாணம் வந்து சேரும். திருமணம் நிறைவேறும். வழக்கு வியாபாரம் வெற்றி அளிக்கும். வீடு மாற்றம் செய்யும் சூழ்நிலை உருவாகும். குரு/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கன்னி:** தடைகள் விலகித் திருமணம் கைகூடும். நண்பர், உறவினர்களால் அனு கூலம் ஏற்படும். குழந்தைகள் பற்றிய மனக் கவலை தீரும். கூட்டாளிகள் விலகிப் போவார்கள். திடீர் பிரயாணம் வந்து சேரும். செலவுகள் சுபமானதாக இருக்கும். ராகு/கேது/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**துலாம்:** தொழில் துறையில் அதிக வருவாய் கிட்டும். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். சொசைட்டியில் நல்ல மதிப்பும் மரியாதையும் பெருகும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். கடன் சுமை தீரும். எதிரிகளால் தொல்லை இருக்காது. வேலையில் இடமாற்றம் ஏற்படும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும்.



# நடக்குமென்பார்; நடக்கும்!

தஞ்சை பரத்வாஜ்

ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம்:** தனபிராப்தி இருக்கும். பண வருவாய் பெருகும். தந்தையை விட்டு விலகிச்செல்ல நேரிடும். நீண்ட தூரப் பிரயாணம் வந்து சேரும். கடன் தொல்லை தீரும். எதிர்ப்புகள் விலகும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். மனச் சலனம் விலகும். தொழில்துறையில் இட மாற்றம் ஏற்படும். புதிய தொழில்முயற்சி பலன் அளிக்கும். நீண்ட காலம் முடிவு பெறாமல் இருந்து வந்த பிரச்னைக்குத் தீர்வு ஏற்படும். குரு/சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**தனுசு:** பண வரவு பெருகும். தடைப் பட்ட காரியம் நிறைவேறும். செலவுகள் சுபமானதாக இருக்கும். சுபநிகழ்ச்சி கைகூடும். உடல் ஆரோக்கியம் சீராகும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். நீண்ட நாள் பிரச்னை முடிவுக்கு வரும். ராகு/கேது வழிபாடு செய்துவர நற்பலன் கிட்டும்.

**மகரம்:** கெட்ட காலத்திலிருந்து விடு பட்டு உள்ளீர்கள். எதிர்பார்க்கும் காரியம் நிறைவேறும். அநாவசியமான செலவுகள் குறையும். உடல் ஆரோக்கியம் சீராகும். உடன்பிறப்புகளால் நற்பலன் கிட்டும். வழக்கு வியாபாரம் வெற்றி பெறும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். பூர்வீக வழியில் ஆதாயம் கிட்டும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கும்பம்:** திடீர் பிரயாணம் செல்லும் சூழ்நிலை ஏற்படும். வீட்டில் சுபச்செலவு ரெடி. உடல் ஆரோக்கியம் பாதிக்காது. வழக்கு வெற்றி அளிக்கும். வேலை மாற்றம் ஏற்படும். குழந்தைகள் இடம் மாறிச் செல்வார்கள். வியாபாரிகள் நல்ல வருவாய் பெறுவர். குரு/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மீனம்:** மன சஞ்சலம் தீரும். வெளி நாடு செல்லும் யோகம் வந்து சேரும். திருமணம் கைகூடும். வழக்கு வெற்றி அளிக்கும். கடன் தொல்லை தீரும். கூட்டாளிகள் விலகிப் போக நேரிடும். பூர்வீக சொத்து பாகப்பிரிவினை ஆகும். வேலைப் பளு குறையும். புதிய வேலை வாய்ப்பு வந்து சேரும். தெய்வ அனுகூலம் ஏற் படும். எதிர்ப்புகள் விலகும். ராகு/கேது வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.



கவிதை



'முகத்தில் முழிக்க மாட்டேன்'
என எப்படிச் சொல்வது
முழுவதும் நனைத்துவிட்ட மழையிடம்?

பிழியப்படும் மிதியடிகளில்
நாட்பட்ட பிரிவின் விரகமாய்ச்
சொட்டுகிறது மழை.

எதிர் மரத்துப் பறவையின் கூடு
என்னாயிற்றோ?
தலை உலுக்கிக் கண்சாய்க்கும்
காக்கையாய்
அடுத்த நாள் மழை.

அடுத்த மழைக்குப் பூப்போட்ட
புதுக்குடை வாங்கவேண்டுமென
போன மழையில் தீர்மானித்துக்
கொண்டவளின்
பழைய குடையில் வாஞ்சையுடன்
பதுங்கியிருக்கிறது இந்த மழை.

பிரிவின் செங்கனலை
விசிறுகின்ற இம் மழை
அறியுமா?
அனல் உன்னிடமும்
சாம்பல் என்னிடமும் என்பதை.

இறுக மூடப்படும் ஜன்னலின்
விளிம்பில்
வலியின் விகாரத்தோடு
மரணித்திருந்த முதியவளாய் மழை.

கம்பளியையும், கணப்படுப்பையும்
நோயற்ற இளமை குறித்த பெருமூச்சோடு
பரணிலிருந்து இறக்கி வைக்கிறது
இந்த மழை.

ரொட்டியும், அடுப்பும்
உலர்தரையும் இருந்தால்
எழுதலாம்
நனையாத காகிதத்தில்
'மழைச் சனியனை'.

# மழைக் கவிதைகள்

தமிழச்சி தங்கபாண்டியன்





"தக்காளி ஒரு வருஷம் தூக்கி விடும். மறு வருஷம் எறக்கி விடும். பரமபதத்துல ஏணி, பாம்பு மாதிரி. என்ன செய்யலாம்? தக்காளி போடுறத நிறுத்திடலாமா?னு யோசிச்சிட்டிருந்தேன். அப்பத்தான் தோட்டக்கலைத் துறை அதிகாரிகள் வந்தாங்க. ஒரு ஐடியா சொன்னாங்க. இஸ்ரேல் நாட்டுத் தக்காளிய நம்ம இந்தியாவுல விளைய வைக்கிற முயற்சியில அரசாங்கம் இறங்கியிருக்கு. நீங்க சம்மதிச்சா அதற்கான ஏற்பாடுகளைச் செஞ்சு தர்றோம்னாங்க. பருத்தியே புடவையாய்க் காய்ச்சாப்லடன்னு சரின்னுட்டேன்!" என்று விவசாயி ஆர்.சண்முகவேலாயுதம் தன் அனுபவக் கதையை ஆரம்பிக்கிறார்.

கோவை, அன்னூர் அருகே முடுக்கன் துறை கிராமம். அங்கு அமைந்துள்ள பசுமைக் குடிலில் விளைகின்றது இஸ்ரேல் தக்காளி. இஸ்ரேல் தக்காளி சாகுபடியாளர்களுக்கு, பசுமைக் குடில் தவிர்க்கவே முடியாதது. அதனை பஞ்சாப் மொகாலியிலிருந்து 'கம்ப்ளீட் கிரீன் ஹவுஸ் சொல்யூஷன்ஸ்' நிறுவனமும், பெங்களூர் 'அக்ரி பிளாஸ்ட்' நிறுவனமும் இணைந்து அமைத்துத் தந்திருக்கின்றன. புற ஊதாக் கதிர்களைத் தாங்கும் திறன் கொண்ட ஷீட் மற்றும் ஜி.ஐ. பைப்புகளைப் பயன்படுத்தி பசுமைக்குடில் அமைக்கப்பட்டுள்ளது. பலத்த காற்று வீசினாலும் குடில் சேதமடையாது. உள்ளிருக்கும் பயிர்கள் 'பஞ்ச்'சர் ஆகாது.

"ஆயிரத்து அறுபது சதுர மீட்டர் பரப்பு கொண்டது ஒரு பசுமைக் குடில். இஸ்ரேல் நாட்டிலிருந்து தக்காளி விதைகளை தருவிக்கிறார்கள். அவைகளை ஊட்டியில் உள்ள தோட்டக்கலைத் துறை பண்ணையில் நட்டு, தக்காளி நாற்றுகளை உருவாக்குகிறார்கள். பசுமைக் குடிலின் உள்ளே ஒரு வரிசைக்கு நாலடி இடைவெளி விட்டு 'பார்' கட்டுகிறார்கள். அந்த 'பார்'களில் தக்காளி நாற்றுகளை நடுகிறார்கள். சொட்டு நீர்ப்பாசனம் வாயிலாக தண்ணீர் பாய்ச்சப்படுகிறது. தக்காளி விவசாயிக்கு இதனால் நான்கு மடங்கு தண்ணீர் மிச்சமாகிறது. நம்முடைய தக்காளிக்குப் பாய்ச்சப்படும் தண்ணீரில் ஐந்தில் ஒரு மடங்கு தண்ணீரே போதும். களையெடுக்கத் தேவையில்லை. பூச்சிக் கொல்லி மருந்தடிக்கத் தேவையில்லை. நாற்று நட்ட தொண்ணூறு நாளிலிருந்து, இஸ்ரேல் தக்காளி இனிய பலன் தரத் துவங்கி விடும்!" எனத் தெரிவிக்கிறார் சூடாமணி.

"சாதாரணமா நம்மூரு தக்காளிச் செடிங்க மூணு அடி உயரத்துக்கு மேல வளராது. ஆனால் இஸ்ரேல் தக்காளிச் செடிகளின் உயரம் அப்படியில்லைங்க. அதை வளர்க்க முப்பதடி உயர விட்டங்கள் கொண்ட குடிலின் கூடாரம் தேவை.

காரணம், சுள்ளுனு வெயில் அடிச்சா வெக்கையாகி அடிபட்டாப்ல காய் பூரா கருங்கிப் போயிடும். நல்லா அடிச்சு மழை பெய்ஞ்சா அப்படியே அழுகிப் போயிடும். உழவு மழை பெய்ஞ்சா போதும். செடிங்க எல்லாம் தரையோட சாய்ஞ்சுடும். இதை யெல்லாம் மீறித்தான் நாங்க தக்காளி விளைவிக்க வேண்டியிருக்கு. இதுக்கெல் லாம் விடிவு காலம் பொறக்கறாப்ல, இப்ப இஸ்ரேல் தக்காளி நம்ம மண்ணுல விளைஞ்சிருக்கு.

சாதாரண தக்காளி மூணு சைஸ்ல காய்க்கும். இஸ்ரேல் தக்காளி அப்படி யில்லை. அதனோட தொண்ணூற்றைந்து சதவிகிதக் காய்கள் ஒரே சைஸாக இருக் கும். ஒரு தக்காளி கொறைஞ்சது இருநூறு கிராமுக்கு மேல வரும். அம்புட்டுப் பெரிசு. மேலும் இதுல பூச்சிக்கொல்லி மருந்து அடிக்கலைங்கறது, நம்ம உணவுக் கும் நல்லது. இஸ்ரேல் தக்காளி காய்க்க ஆரம்பிச்சதுலேர்ந்து தொடர்ந்து பதி னைஞ்சு மாசம் நல்ல பலன் தரும். இதுக்கு வங்கி லோன் தருது. அரசு அதுல அம்பது சதம் மானியமா விவசாயிக்குத் தருது. இந் தியாவுல இது மூணே மூணு எடத்துலதான் அமைக்கப்பட்டிருக்கு. பஞ்சாப்ல ரெண்டு. மூணாவது பகுமைக்குடில். இஸ்ரேல் தக் காளி உற்பத்தி, தமிழ்நாட்டுல முடுக்கன் துறையில மட்டும்தான்! சுற்று வட்டாரத் திலிருந்து இஸ்ரேல் தக்காளியைப் பார்க்க சுற்றுலா மாதிரி ஜனங்க வந்து போறாங்க'' என்கிறார் ஆர்.சண்முக வேலாயுதம்.

**- ஸ்ரீரங்கம் திருநாவு**



• இஸ்ரேல் தக்காளி



• ஆர்.சண்முக வேலாயுதம்

# இங்கேயும் விளையுது... இஸ்ரேல் தக்காளி!

கீழே விழுந்த நட்சத்திரத்தை எடுத்து கவரில் ஒட்டினாள் ரேவதி. அது ஸ்டிக்கர் பொட்டுப் போல அழகாக ஒட்டிக் கொண்டது. விரல் நுனி அளவுக்கு சிறியதாக இருந்தது. இந்த வீட்டுக்கு வந்த புதிதில், பக்கத்து வீட்டு சோமுதான் ஒரு அட்டைப் பெட்டி நிறைய கொண்டு வந்து சீலிங் முழுக்க ஒட்டினான். 'ராத்திரியில லைட்டை அணைச்சுட்டுப் பாருங்க ஆன்ட்டி! வானத்துல நட்சத்திரத்தைப் பார்க்கற மாதிரியே இருக்கும்.'

ஆனால், ஒருநாள்கூடப் பார்க்க முடிந்ததில்லை. பாஸ்கருக்கு இருட்டு பிடிக்காது. விடி விளக்கை எரியவிட்டால்தான் அவனுக்குத் தூக்கம் வரும். அதைக்கூடப் பார்த்துப் பார்த்து வாங்குவான். சிவப்பு என்றால் மிக மங்கலாக ஒளி வரும். பச்சை கொஞ்சம் கூடுதலாக வெளிச்சம் தரும். எப்போதும் மஞ்சள்தான் சிறந்தது. ஜீரோ வாட்ஸ் பல்பைப் போட்ட மாதிரியே இருக்காது. அறை முழுக்க வெளிச்சத்தில் மிதக்கும்.

திருந்தான். தூக்கத்தில் குழந்தை மாதிரி இருந்தான். குழந்தையா அவன்? இப்படியெல்லாம்கூட ஒரு குழந்தை செய்யுமா?

ரேவதிக்கு அறையை விட்டு வெளியே போய் வானத்தைப் பார்க்கவேண்டும் போல இருந்தது. நகரத்தில் நட்சத்திரங்கள் தெரியும். ஆனால், முழுமையாகப் பார்த்து ரசிக்க முடியாது. அத்துவானக் காட்டில் நின்று நட்சத்திரக் கூட்டத்தைப் பார்த்தால்தான் மனசு ஆறும் போல இருந்தது அவளுக்கு.

ரேவதி கட்டிலில் இருந்து கீழே இறங்கினாள். மிக மெதுவாக அறைக்கதவைத் திறந்து வெளியே வந்தாள். சிறு சத்தம் கேட்டால்கூட பாஸ்கர் முழித்துக் கொள்வான்.

# நட்சத்திரம் விழுந்த இரவு

'இவன் எப்படி இவ்வளவு வெளிச்சத்தில் தூங்குகிறான்?' என்று இருக்கும் ரேவதிக்கு. கைகளைக் கண்ணுக்குக் குறுக்காகப் போட்டுப் படுத்தால்கூட அவ்வளவு சீக்கிரத்தில் அவளுக்குத் தூக்கம் வராது. அசதியில் தன்னை மறந்து தூக்கம் வந்தால்தான் உண்டு.

பாஸ்கர் கட்டிலில் ஒருக்களித்துப் படுத்



''என்ன?''

''பாத்ரூம் போறேன்.''

அவள் வீட்டுக் காம்பவுண்டுச் சுவரை ஒட்டியிருந்த கொடுக்காப்புளி மரத்தின் கிளைகள் காற்றில் ஆடிக் கொண்டிருந்தன. நல்ல காற்று. அப்படியே சுவரில் சாய்ந்து நிற்கவேண்டும் போல இருந்தது. ஆனால், ரொம்ப நேரத்துக்கு நிற்க முடியாது. 'வெளியே என்ன பண்றே?' பத்து வீட்டுக்குக் கேட்பது போல சத்தம் போடுவான். வெளிவாசல் கேட்டின் இடுக்கு வழியே உள்ளே நுழையப் பார்த்த பெருச்சாளி ஒன்று, இவளைப் பார்த்துவிட்டுத் திரும்பி ஓடியது. தெருவில் ஒரு நாய் அழுகிறாற்போல் ஊளையிட்டது. ரேவதி மறுபடியும் உள்ளே வந்தாள். கதவைத் தாழிட்டாள். சமையலறைக்குப் போய் தண்ணீர் குடித்தாள். படுக்கையறைக் கதவைச் சாத்திவிட்டு, அவன் பக்கத்தில் படுத்தாள்.

''என்ன தூக்கம் வரலையா?'' பாஸ்கர் கண்ணைத் திறக்காமல் கேட்டான்.

''ஆமா.'' ஒருகணம் அவனிடமே கேட்டுவிடலாமா என்று தோன்றியது. ஆனால், பயமாக இருந்தது. 'ஆமா. இப்போ என்ன அதுக்கு? வேலையப் பாத்துகிட்டுப் போடி' என்று சொல்லிவிட்டால் என்ன செய்வது?

## பாலு சத்யா



ஒருவேளை லட்சுமி அத்தை சொன்னது பொய்யாக இருந்தால்? சே சே! அவள் ஏன் பொய் சொல்ல வேண்டும்? சென்னையில் ரேவதிக்குத் தெரிந்த, அவள் ஊரைச் சேர்ந்த ஒரே மனுஷி லட்சுமியம்மாள். ஒரே துணை என்றுகூடச் சொல்லலாம். அம்மாவின் சிநேகிதி. அன்று மதியம் வீட்டுக்கு வந்த லட்சுமி அத்தை மெதுவாக விஷயத்தை ஆரம்பித்தாள். அவள் சொல்லச் சொல்ல அதிர்ந்து போனாள் ரேவதி.

அவிழ்க்க முடியாத புதிர்களால் வடிவமைக்கப்பட்டவர்கள் மனிதர்கள். வெளிப் பார்வைக்கு அது

தெரிவதில்லை. பாஸ்கரும் அப்படித்தான் இருந்தான். மருந்துக் கம்பெனி பிரதிநிதி வேலை. மாதத்தில் பத்து, பதினைந்து நாட்கள் வெளியூரில் அவன் இருக்க வேண்டியது தவிர்க்க முடியாத ஒன்று என்றுதான் ரேவதி நினைத்திருந்தாள். உண்மையில் அந்த நாட்களில் அவன் இன்னொருத்தியுடன் குடும்பம் நடத்திக்கொண்டிருந்தான் என்பதை, அவளால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை.

அவனோடு வாழ்ந்த இந்த மூன்று ஆண்டுகளில், அவனைச் சந்தேகிப்பதற்கு சிறு நூலிழை வாய்ப்பைக்கூட அவன் அவளுக்குத் தந்ததில்லை. அந்தப் பெண்ணின் பெயர் சுசீலா. வடபழனியில் அவளுடைய வீடு இருக்கிறது. அவளுக்கு இரண்டு வயதில் ஒரு குழந்தையும் உண்டாம். நன்கு விசாரித்து ஆதாரங்களைத் திரட்டிக்கொண்டு வந்திருந்தாள் லட்சுமியம்மாள்.

கேள்விப்பட்டதிலிருந்து ஏதோ ஒன்று அடிவயிற்றில் பற்றி எரிவது போல இருந்தது ரேவதிக்கு. தஞ்சாவூரில் இருக்கும் அப்பாவுக்கு ஃபோன் போட்டுத் தகவல் சொல்லலாமா? பதற்றத்தில் அவருக்கு ஏதாவது ஆகிவிட்டால்? அவனுடைய வீட்டு மனிதர்களிடம் சொல்லலாமா? அவனுடைய அம்மாவும் அப்பாவும் தங்கையும் கோயம்புத்தூரில் இருக்கிறார்கள். ஏதாவது விசேஷங்களில் பார்த்து, சிரித்துப் பேசுவதோடு சரி. எப்போதும் ஓர் அடி தள்ளியே நிற்கிற ஜனங்கள். ஒருவேளை அவர்களுக்கும் தெரிந்திருக்குமோ? அவளால் முடிவெடுக்க முடியவில்லை. அம்மா உயிரோடு இருந்திருந்தால் இப்படியெல்லாம் நடந்திருக்காதோ? அவளுக்குத் தன் மீதே இரக்கமாக இருந்தது.

அது உண்மையாகவே இருந்தாலும் அவனிடம் போய் எப்படிக் கேட்பது? மெகா சீரியலில் வருவதுபோல அழுது ஆர்ப்பாட்டம் செய்து அவளுடைய தாலியைப் பிடித்து இழுக்க வேண்டுமா? 'என் புருஷனை எனக்குக் குடுத்துடு' என்று மடிப்பிச்சை கேட்க வேண்டுமா?

இவனை என்ன செய்வது? போலீசில் பிடித்துக் கொடுத்துவிடலாமா? போலீஸ் ஸ்டேஷன் படியை எப்படி மிதிப்பது? யார் துணைக்கு வருவார்கள்? அதற்கும் லட்சுமி அத்தையைத்தான் கூப்பிட வேண்டுமா?

'சார்! என் புருஷன் இன்னொருத்தியோட குடும்பம் நடத்துறாரு. நீங்கதான் சார் ஒரு வழி பண்ணணும்.' போலீஸ்காரர்கள் பாஸ்கரை முட்டிக்கு முட்டி



''ஒரு காலத்துல பாயசத்துல முந்திரியைத் தேடினோம்...''

''இப்ப...?'

''சாம்பார்ல காயைத் தேடறோம்...''

– ஜே. தனலட்சுமி

"புதுசா வந்த இன்ஸ்பெக்டர், முதல் நாளே ரொம்ப கறாரா நடந்துகிட்டாராமே?''

''ஆமாம்; 'மாமூல்' கொடுக்காம டபாய்க்கிற 'கேடி'ங்க லிஸ்ட்டைத் தயார் பண்ணச் சொல்லிட்டார்.''

- அனன்யா



தட்டி லாக்கப்பில் போடுவார்கள். பிறகு விசாரணை. அவனுக்கு ஐந்து வருடம் சிறைத்தண்டனை கிடைக்குமா? அதுவரை என்ன செய்வது? அப்பாவிடம் போய்விடலாம். அவரை ஏன் தொந்தரவு செய்ய வேண்டும்? சென்னையிலே இருக்கலாம். எந்த அவசரமும் இல்லாமல் எந்தக் கட்டுப்பாடும் இல்லாமல் இஷ்டத்துக்கு இருக்கலாம். பசித்தால் சமைக்கலாம். படுத்தே கிடக்கலாம். அவன் வந்துவிடுவானோ என்ற பயம் இல்லாமல், 'கன்னா பின்னா' வென்று டி.வி சேனல்களை மாற்றி மாற்றி வெறித்துப் படம் பார்க்கலாம். அவன் வீட்டார் சும்மா விடுவார்களா? முடியைப் பிடித்துத் தெருவில் இழுத்துப் போட்டு மிதிப்பார்கள். 'எங்கள் குடியைக் கெடுத்துட்டியேடி' என்று அரற்றுவார்கள். அவள் என்ன செய்வாள்? அது கிடக்கட்டும். தண்டனை முடிந்து வந்ததும் பாஸ்கர் என்ன செய்வான்? இங்கே வருவானா, அவள் வீட்டுக்குப் போவானா? அதற்குப் பிறகு... ரேவதி தூங்கிப் போனாள்.

அடுத்தநாள், அவளுக்கு முன்பாகவே சோம்பல் முறித்து வாசலில் வந்து உட்கார்ந்திருந்தது சூரிய வெளிச்சம். அவன் உறங்கிக் கொண்டிருந்தான். இனி என்ன செய்வது? முதலில், 'அது' உண்மை தானா என்று தெரிய வேண்டும். அவளைப் பார்க்க வேண்டும். அவ்வளவு தான். பாஸ்கர் கிளம்பும்வரை வெகு கவனமாக முகத்தில் எந்த உணர்ச்சியையும் காட்டாமல் இருந்தாள் ரேவதி. அவன் போன பத்தாவது நிமிடம் வீட்டைப் பூட்டிவிட்டுத் தெருவில் இறங்கினாள்.

வடபழனி முருகன் கோயிலுக்குப் பின்னால் இருந்த தெருவில் இருந்தது சுசீலாவின் வீடு. ரேவதி, தெரு முனையிலேயே ஆட்டோவில் இருந்து இறங்கிக்கொண்டாள். 'மாவு விற்கும் வீடு' என்று சொன்னால் எல்லோருக்கும் தெரிந்திருந்தது. வாசலிலேயே போர்டு மாட்டியிருந்தது. ஒருகணம் தயங்கினாள். பிறகு கதவைத் தட்டினாள்.

அவள் கதவைத் திறந்தபோது, பின்னாலேயே ஒரு இரண்டரை வயதுச் குழந்தை எட்டிப் பார்த்தது.

''யாரு?''

''அது... மாவு வேணும்.''

''அரைச்சுக்கிட்டிருக்கேன். பத்து நிமிஷம் ஆகும். வெயிட் பண்றீங்களா?''

''சரி.''

''உள்ள வாங்க.''

ரேவதி செருப்பைக் கழற்றிவிட்டு

## ரீடர்ஸ் கார்னர்

குளச்சல் கடற்பரப்பில் டச்சுப்படைக்கு எதிராக கி.பி.1714 ஜூலை 31ல் நடைபெற்ற போர் திருவிதாங்கூர் படைத்தளபதி தளவாய் வேலுத்தம்பியின் கூரிய சிந்தனைக்குச் சான்றாய் அமைந்தது. குளச்சல் நோக்கி படையெடுத்து வந்த டச்சுப்படை, திருவிதாங்கூர் படையின் பீரங்கி வரிசைகளைக் கண்டு அச்சமுற்று தயங்கியது. திருவிதாங்கூர் படையில் எப்படி பீரங்கி? குளச்சல் கடற்கரையில் வரிசையாக மாட்டுவண்டிகளை நிறுத்தி, அதில் பனைமரத்தை நீளவாக்கில் உண்மையான பீரங்கிகள் போல் அமைத்து டச்சுப்படையை அஞ்சி நிற்க வைத்தார் வேலுத்தம்பி. அந்த சரித்திர வெற்றியின் அடையாளமாய் அன்று நாட்டப்பட்ட வெற்றித் தூண், இன்றும் குளச்சலில் எதிர்கால சமுதாயத்துக்குச் செய்தி சொல்லும் கலங்கரை விளக்கமாய்த் திகழ்கிறது.

- த.இ.தாகூர்



உள்ளே போனாள்.

''புதுசா வந்திருக்கீங்களா?''

''ஆமா.''

''உக்காருங்க.''

ரேவதி ஒரு நாற்காலியில் அமர்ந்தாள். விரல்கள் லேசாக நடுங்குவதுபோல இருந்தது. அந்தப் பெண் அணிந்திருந்த கல் மூக்குத்தி அவளுக்கு எடுப்பாக இருந்தது. அவள் சிரித்த முகமாக இருந்தாள். வீடு படு சுத்தமாக இருந்தது. ஒரே ஒரு ஹால். சிறியதாக சமையலறை, ஒட்டினாற்போல் பாத்ரூம். ஹாலில் மூலையில் கிரைண்டர் 'லொட லொட'வென்று சத்தம் போட்டுக் கொண்டிருந்தது. குழந்தை ஓடி வந்து ரேவதியின் மடியில் தாவி ஏறிக்கொண்டது.

''குட்டி! ஆன்ட்டியைத் தொல்லை பண்ணக்கூடாது. இறங்கு'' அவள் சிரித்தாள்.

''யார்கிட்டயும் போக மாட்டான். உங்ககிட்ட ஒட்டிக்கிட்டான் பாருங்களேன்!'' அவளுடைய கை கிரைண்டரிலிருந்து மாவை வழித்துக்கொண்டிருந்தது.

''தம்பி பேரு என்ன?''

''இன்னும் சரியா பேச்சு வரலை. அப்பா பேரை மட்டும் சொல்லுவான்.''

''அப்பா பேரு என்ன?''

''பா...பாஸ்''

''உங்களுக்கு எத்தனை பசங்க?''

ரேவதி 'இல்லை' என்பது போல தலையசைத்தாள்.

''அடடா! கவலையே படாதீங்க! இன்னும் ஒரே வருஷத்துல இவனை மாதிரியே ஒரு சுட்டிப் பையன் பொறந்துடுவான்.''

அவளால் எப்படி எப்போதும் ஒரு சிரிப்பை இதழ்க் கோடியில் தேக்கி வைக்க முடிகிறது? ரேவதி குழந்தையின் கன்னத்தில் அழுத்தமாக ஒரு முத்தம் கொடுத்து இறக்கிவிட்டாள். மாவு பாக்கெட்டை வாங்கிக்கொண்டாள்.

''வர்றேங்க.''

''வாங்க.''

ரேவதி யதேச்சையாக மேலே பார்த்தாள். சீலிங் முழுக்க வெளிறிப் போன பச்சையில் நட்சத்திரங்கள் ஒட்டியிருந்தன. சட்டென்று திரும்பிப் பார்த்தாள். சுவரில் மஞ்சள் நிற விடிவிளக்கு. ரேவதிக்கு இந்த வீட்டில் நட்சத்திரம் எதுவும் விழாது என்றுதான் தோன்றியது.

வீட்டை விட்டு வெளியேறி சாலையில் நடந்தபோது, குழந்தைக்கு ஒரு பிஸ்கெட் பாக்கெட் வாங்கிப் போயிருக்கலாம் என்றும் தோன்றியது ரேவதிக்கு ○

## ஆயிரத்தில் ஒருவன் 7

# உயரமான கனவு!

'மா·பா' பாண்டியராஜன்

"அம்மா... ப்ளேன் போகிறது'' என்று உற்சாகமாகக் கத்திக்கொண்டே வீட்டு மாடிக்கு ஓடினான் அந்தச் சிறுவன். கண்ணிலிருந்து அந்த விமானம் மறையும் மட்டும் பார்த்துக் கொண்டிருந்து விட்டு வந்த சிறுவனைப் பார்த்து தாய், "நீயும் பெரியவனான பிறகு ப்ளேனில் போகலாம்'' என்றாள்.

"இல்லம்மா... நான்தான் ப்ளேனையே ஓட்டுவேன்'' என்றான் சிறுவன். அச்சாக மனத்தில் ஒட்டிக்கொண்ட ஆசையை நிறைவேற்றிக்கொள்ளும் வகையில் கல்லூரிப் படிப்பு முடித்ததும், பைலட் பயிற்சியில் சேர்ந்து விமான ஓட்டி உரிமமும் அவர் வாங்கி விட்டார். இன்னமும் ஒரு படி மேலாக, சொந்தமாக விமானங்களை வாங்கி, ஒரு விமான நிறுவனத்தையே துவக்கிவிட்டார். அப்போது அவருக்கு வயது இருபத்தெட்டுதான். அந்த மனிதர்தான் பாரமவுண்ட் ஏர்லைன்ஸ் நிர்வாக இயக்குநர் தியாகராஜன்.

செட்டிநாட்டைச் சேர்ந்த தியாகராஜன் குடும்பம் பரம்பரையாக வட்டித் தொழில் செய்து வந்த குடும்பம்தான். ஆனால் அவரது தாத்தா பரமாத்தூர் தியாகராஜன் முதன்முறையாகப் புதிய தடம் பதித்து, மதுரை வங்கியைத் துவக்கினார். "எனக்கு அவர்தான் பெரிய ஊக்க சக்தியாக இருந்தார்'' என்கிறார் தியாகராஜன். தொழில் துவங்க வேண்டும் என்று தீர்மானித்தவுடன் பாரமவுண்ட் டெக்ஸ்டைல்ஸ் என்ற துணி ஆலையை முதலில் துவக்கினார். அது சக்கை போடு போடவே, தமது





* தியாகராஜன்

கனவான விமான நிறுவனத்தைத் துவங்குவதற்கு முனைந்தார். குடும்பம் முழுவதும் அவரது முயற்சிக்குத் துணைநின்றது. இப்போது ஏவியேஷன் துறையில் ஒரு குறிப்பிடத்தக்க நிறுவனமாக உயர்ந்து நிற்கிறது பாரமவுண்ட். இந்தத் துறையில் சாதனைகளுக்காக பல உள்நாட்டு, வெளிநாட்டு விருதுகளை வாங்கியிருக்கிறார் தியாகராஜன். 2011ல், 40 விமானங்கள் கொண்டு இயங்க வேண்டும் என்ற நோக்கோடு, பறந்து கொண்டிருக்கிறார். ''மிக உயர்ந்த கனவு, தெளிவான பார்வை, கடின உழைப்பு, உங்களை உயரே, உயரே கொண்டு சென்றுவிடும்'' என்று தமது வெற்றி ரகசியத்தைச் சொல்கிறார்.

தியாகராஜனின் பாரமவுண்ட் நிறுவனத்தைப் போன்றே பல தனியார் விமான நிறுவனங்கள், இந்திய வானத்தை வளையவருகின்றன. இன்று ஏவியேஷன் துறை மிகப் பிரகாசமான எதிர்காலத்தை நோக்கிச் செல்வதாகச் சொல்கிறார்கள் அந்தத் துறை நிபுணர்கள். இப்போது மொத்தமே இருநூறுக்கும் குறைவான பயணிகள் விமானங்களே இந்தியாவில் இருக்கின்றன. அது இன்னமும் நான்கு வருடங்களில் ஐந்நூறாக உயரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்தியாவில் 454 விமான நிலையங்கள் இருக்கின்றன. அதில் 16 சர்வதேச விமானதளங்கள். விமானத் துறையில், தனியாரும் பங்கேற்கலாம் என்று முடிவெடுக்கப்பட்டபின், எழுபத்தைந்து சதவிகிதம் வர்த்தகம். இப்போது தனியார் விமான நிறுவனங்களிடம் வந்து விட்டது. விமானக் கட்டணம், குறைந்துவிட்ட காரணத்தால், மக்கள் அதிக அளவில் விமானப் பயணங்களை நாட ஆரம்பித்து விட்டனர்.

உலக ஏவியேஷன் வர்த்தகத்தில் இந்தியா ஒன்பதாவது இடத்தில் இருக்கிறது. ஆண்டு ஒன்றுக்கு 27 சதவிகிதம் வளர்ச்சி பெறுகிறது இந்தத் துறை. வளரும் இந்தத் துறையை கணக்கிலெடுத்துக்கொண்டு,



மும்பையில் ஓட்டல்களின் மீது தீவிரவாதிகளின் தாக்குதல் காரணமாக, சர்வதேச சுற்றுலாப் பயணிகளின் வருகை குறையக்கூடும். இதனால் ஓட்டல் நிர்வாகங்கள் தங்கள் விஸ்தரிப்புத் திட்டத்தை ஒத்திப் போடவோ, ரத்து செய்யவோ வாய்ப்புண்டு. இந்த நிலையில் விருந்தோம்பல் துறையில் சென்ற வாரம் சொன்னதை விட வேலை வாய்ப்பு மேலும் குறையும். இதைப் பற்றி நாங்கள் ஆய்வு செய்து வருகிறோம்.

இளைஞர்களுக்குப் பயிற்சி, பெண்களுக்குச் சுய அதிகாரம் மற்றும் வேலை வாய்ப்பை அதிகப்படுத்துதல் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு நல்ல பல திட்டங்கள் நாட்டிலும் உண்டு. ஆனால், யாருக்காக அவை அமல்படுத்தப்படு

கட்டுமானங்கள் உருவாக்கப்படுகின்றன. பெங்களூருவிலும், ஹைதராபாத்திலும் பசுமை வெளி விமானதளங்கள் (Green field Airport) வந்திருக்கின்றன. சென்னையில் இதுபோன்று வர இருக்கிறது. துபாயைச் சேர்ந்த இ.டி.ஏ. (ETA) ஸ்டார் என்ற நிறுவனம் மிகப் பெரிய அளவில் முதலீடு செய்ய இருக்கிறது. தில்லி நொய்டா அருகில் உள்ள சிறப்புப் பொருளாதார மண்டலத்தில் விமான பாகங்கள் தயார் செய்யும், பழுதுபார்க்கும் பெரிய தொழில் மையம் உருவாகி வருகிறது.

விமான நிலையங்கள் கட்டணத்தைக் குறைத்து, நிறைய பயணிகளைக் கவர இருக்கின்றன. விமான ஓட்டிகள், பணிப் பெண்கள், தொழில்நுட்பம், டிகிரி, டிப்ளமா படித்த இளைஞர்கள், படிக்காதவர்கள் என்ற பலவகையான பிரிவினருக்கு வேலை வாய்ப்பு இந்தத் துறையில் காத்திருக்கிறது.

**(வெளிச்சம் வீசும்)**

எழுத்தாக்கம் : **ஸ்ரீநி**

# பாண்டி 'S BLOG

கிறதோ அந்த மக்களுக்கு அதைப்பற்றி விழிப்புணர்வு இல்லை. இதனால் திட்டங்கள் முறையாகச் செயல்படாமல், ஒதுக்கப்பட்ட நிதி செலவிடப்படாமலே போகும். அதைப் போலவே பல வெளிநாட்டுத் தனியார் நிறுவனங்கள், சர்வதேச நிதி அமைப்புகள் ஆகியவையும், பல திட்டங்களை இந்தியாவில் செயல்படுத்தி வருகின்றன. அப்படிப்பட்ட திட்டங்களில் ஒன்றுதான், முழுக்க உலக வங்கியின் நிதி உதவியுடன் நடத்தப்படும் 'வாழ்ந்து காட்டுவோம் திட்டம்'. இந்தத் திட்டம் பெண்கள் மேம்பாடு நிறுவனத்தால் அமல்படுத்தப்படுகிறது.

717 கோடி ரூபாய் செலவில், தமிழ்நாட்டில் 15 மாவட்டங்களில், 2400 பஞ்சாயத்துக்களில் இதன் திட்டம் செயல்படுகிறது. இதன் அடிப்படையில் ஒவ்வொரு கிராமத்திலும் வறுமை ஒழிப்புக் குழு ஒன்று அமைக்கப்பட்டு, திட்டத்தை அமலாக்கும் பொறுப்பு அதற்கு வழங்கப்பட்டிருக்கிறது. சுமார் மூன்றரை லட்சம் குடும்பங்கள் பயனடைய வேண்டும் என்பதைக் குறியீடாகக் கொண்டு செயல்படுத்தப்படுகிறது. இந்தத் திட்டத்துக்காக ஒதுக்கப்பட்ட தொகையில் தொண்ணூறு சதவிகிதம் ஏழைப் பெண்களின் நலனுக்காகவே செலவழிக்கப்படும். பெரிய கார்ப்பரேட் யானைகளான நோக்கியா, ஹூண்டாய், டி.வி.எஸ்., ஆகிய நிறுவனங்களும் இந்த முயற்சியில் பங்கெடுத்துக் கொண்டுள்ளன. இந்தத் திட்டம் தொடர்பான விவரங்களை, செயலர் (ஊரக வளர்ச்சித் துறை, தமிழ்நாடு அரசு) அவர்களிடம் பெற்றுக் கொள்ளலாம்.



# தெளிவு

''சொன்னாலும், ஆச்சரியப்படு வீங்க, அப்படியொரு பையன். நிறைய படிச்சிருக்கார். மாதம் பதினைந்தாயிரம் சம்பளம். உங்க பொண்ணு ஃபோட்டோ வைக் காட்டிப் பேசினப்ப, வரதட் சணையே வேண்டாம்னு சம்மதம் தெரிவிச்சிருக்கார்.'' பலராமன் பேசிக் கொண்டே போக, ''அப்படியா?'' என்று உற்சாகமானார் லோகநாதன்.

''ஈஸ்வரா...'' நன்றியுடன் தெய் வத்தை நினைத்த மாதவி, ''மாப்பிள்ளை யோட பெயரென்ன? அவரு குடும்பத் தைப் பத்திச் சொல்லுங்க'' என்று ஆவலுற்றாள்.

''பேர் பிரேம். சின்ன வயசுலேயே பெற்றோரை இழந்துட்டார். அவரை வளர்த்து, படிக்க வச்சதெல்லாம் சித் தப்பாதான். அவர்தான் முன்னின்று இந்தத் திருமணத்தை நடத்தி வைப்பார்'' என விவரித்தார்.

வைகாசி பன்னி ரண்டு... அந்த முகூர்த்த நாளில், பிரேம், லோக நாதனின் வீட்டுக்கு முறைப்படி பெண் கேட்டு வந்தான்.

''வணக்கம்.''

''வாங்க மாப்பிள்ளே! உட்காருங்க''

''எனக்கு அப்பா, அம்மான்னு யாரும் இல்லே, அதான் நானே...''

''ம்! பலராமன் எல்லாத்தையும் சொல் லிட்டார். நீங்க என் மகளுக்கு வாழ்க்கைத் துணையாய் அமையறது, நாங்க செய்த புண்ணியம்.'' லோகநாதன் பேசிக்கொண் டிருக்க, மாதவி தன் மகளை அழைத்து வந்து பிரேமுக்கு விருந்து பரிமாறச் செய் தாள்.

தன் வருங்கால மனைவியை நேரில் பார்த்த திருப்தியில் வீடு திரும்பிய பிரேம், திருமண ஏற்பாடுகளில் ஜரூராய் இறங் கினான். ஒருமுறை மாப்பிள்ளை பிரேமின் வீட்டுக்குப் போய் திருமண விஷயமாகப் பேசிவிட்டு வரக் கிளம்பினார் லோக நாதன்.

''வாங்க மாமா'' வரவேற்பு பலமாயிருந் தது.

'எவ்வளவு பெரிய வீடு! எத்தனை வசதி கள்? இவ்வளவும் என் மகளுக்குத்தானா!' அகமகிழ்ந்தார் லோக நாதன்.

அப்போது இரு காஃபி கோப்பை



களுடன், அங்கு வந்த பணிப்பெண், லோக நாதனுக்கு, ஒரு தம்ளரைக் கொடுத்து விட்டு, பிரேமிடம் ஒரு தம்ளரை நீட்டினாள். அப்போது, சட்டெனக் கைநழுவி, பிரேமின் சட்டையில் காஃபி சிதற... ''ஏய்! உனக்கு அறிவு இருக்கா? இப்படியா பண்ணுவது?'' என்று கொதித்தான் பிரேம்.

சில நொடிகளில் இயல்பு நிலைக்குத் திரும்பிய அவன், ''மாமா! நிச்சயதார்த்தத்தின் நினைவாக, தனலட்சுமிக்கு ஒரு மோதிரம் எடுத்தேன்'' என்றபடி எழுந்து, பீரோவைத் திறந்து தேடினான்.

அங்கு அது இல்லாமல் போகவே, ''ஏ பொன்னி!'' என்று வேலைக்காரியை ஆத்திரத்துடன் அழைத்தான். துணி துவைத்துக் கொண்டிருந்த அவள், ஓட்டமும் நடையுமாய் வந்து நிற்க, ''இங்க வெச்ச மோதிரத்தை நீயா எடுத்தே? உண்மையைச் சொல்'' என்றான் சந்தேகப் பார்வையோடு.

''நான் எடுக்கலேய்யா'' என்று அவள் மறுக்க, தன் அலுவலகப் பையினுள் துழாவினான். அதில் மோதிரம் இருக்க, ''மறந்தே போயிட்டேன். நேற்று ஆஃபீஸில் ஒருவரிடம் காட்ட எடுத்துட்டுப் போயிருந்தேன்'' என்றவன், ''இந்த மோதிரம்தான் மாமா. நல்லாயிருக்கா?'' என்றான் ஆவலோடு.

''ம்'' சிரிப்பையே பதிலாக்கிய லோக நாதன் அங்கிருந்து புறப்பட்டார்.

'சின்ன விஷயத்துக்கெல்லாம் கோபப் படுகிறார். சந்தேகப் புத்தியுடன் பிறரைப் பார்க்கிறார். அடுத்தவங்களை அலட்சியப் படுத்தி அவமானப்படுத்தற புத்தியுள்ள வராயிருக்கிறார். இவருக்கு மணம் முடித்துக் கொடுத்தால், மகளின் வாழ்க்கை என்னாகும்?' என்றெண்ணிய லோக நாதன், வீடு திரும்பியதும், தன் மனைவியிடம் சொன்னார். ''வசதியை விட நிம்மதி ரொம்ப முக்கியம். நம்ம பொண்ணுக்கு இந்த வரன் வேண்டாம்.'' ●

# தாஜ், ஓபராயில் இனி தங்க வருவார்களா?



● அகிலா அன்புமணி, ஈரோடு

? மும்பையில் தீவிரவாதிகளைப் பிடிப்பதற்கான அதிரடிப்படையினரின் முயற்சிகளுக்கு, தொலைக்காட்சி நேரடி ஒளிபரப்பால் பெரும் பாதிப்பு ஏற்பட்டது என்கிற குற்றச்சாட்டு குறித்து...?

! இது ஏற்றுக்கொள்ளக்கூடிய விஷயமே. உதாரணமாக ஒன்று - கமாண்டோக்கள் ஹெலிகாப்டர் மூலம் இறங்குவதை, தீவிரவாதிகளும் உள்ளிருந்தபடி டீ.வியில் பார்த்தனர். இது அதிரடிப்படையின் செயல்பாட்டுக்கு இடையூறுதானே.

● என். சங்கரதாஸ், ஸ்ரீவில்லிபுத்தூர்

? காடுவெட்டி குரு மீது போடப்பட்ட வழக்கு சரியானதே என்று உயர்நீதிமன்றம் கூறிய பிறகு, தமிழக அரசே அவ்வழக்கை வாபஸ் பெற்றுள்ளதால், நாம் அதனைப் பொய் வழக்கு என்று எடுத்துக் கொள்வதா? அல்லது முதல்வரின் ஸ்திரமற்ற செயல்பாடு என்பதா?

! ராமதாஸை சமாதானப் படுத்தி பா.ம.க.வை மறுபடி கூட்டணியில் சேர்க்க எடுத்துக்கொள்ளும் முயற்சிகளுள் ஒன்றாகக் கருதலாம். நீதித் துறையில் அரசியல் தலையீடு இப்படியெல்லாம் செயல்படக்கூடும் என்பதற்கு ஓர் உதாரணம்.

● ஜெ. ஜெயராணி, மதுரை

? "மத்திய அரசை இயக்கும் ரிமோட் கண்ட்ரோல் கருணாநிதி" என்கிறாரே விஜயகாந்த்?

! அப்படி இருந்துவிட்டால்கூட தேவலாமே; ஆனால், பிரதமரை இரண்டு ரிமோட்கள், இரண்டு திசைகளிலிருந்து கண்ட்ரோல் செய்வதுதான் ரொம்ப ரொம்பப் பரிதாபம்! நாட்டின் துரதிர்ஷ்டம்!



* பார்த்தே பிரியாணி!

● வீ. பெரியசாமி, தேனூர்

? சென்னை மற்றும் அனைத்து உள்ளாட்சிகளிலும் தவிர்க்க முடியாத வேலைகளைத் தவிர வேறெதற்கும் பாதாளச் சாக்கடைக்குள் மனிதர்களை இறக்கக்கூடாது என்று ஹைகோர்ட் உத்தரவிட்டுள்ளது பற்றி...?

! சாக்கடை அடைத்துக் கொண்டால், அடைப்பை நீக்குவதென்பதைத் தவிர்க்க முடியுமா என்ன? ஒரு பக்கம் அருந்ததியருக்கு உள் ஒதுக்கீடு; இன்னொரு பக்கம் கழிவு நீர் அகற்றலை மேம்படுத்த முற்

## நீங்கள் கேட்டவை

படாத மெத்தனம்! போங்க ஸார்; அடைச்சுக்கிட்ட சாக்கடையைவிட அதிகமா நாறுது!





● கே. துரைசாமி, மங்களப்பட்டி

? உடலமைப்பின் அழகு வெளிப் படையாகத் தெரிவது போல் உள்ளத்தின் அழகும் தெரிந்தால்?



! ஒரு சமயம் ரொம்ப அழகாகவும் இன்னொரு சமயம் அதி கோரமாகவும் மாறி மாறித் தோன்றும். இறைவன் படைப்பில் எல்லா மனிதர்களும் இப்படித்தான். விதி விலக்கு இருந்தால், தொடர்ந்து அழகாகக் காட்சியளித்தால், அவர் மனித தெய் வம்!

● ரேவதிப்ரியன், ஈரோடு

? "அ.தி.மு.க.வுடன் முரண்பாடுகள் இல்லை; ஆனால், வித்தியாசங்கள் இருக் கலாம்" என்கிறாரே தா. பாண் டியன்? புரியலையே?

! விஷயம் ரொம்ப சிம்பிள் ஸார்! "கொள்கைகளில் ரொம்ப வித்தியாசங்கள் உண்டு; ஆனா லும் தேர்தல் கூட்டணி தேவை என்பதில் முரண்பாடு ஏதும் இல்லை!" என்கிறார்.

✱ வெட்டுப்பட்ட வழக்கு!

✱ விளங்கும் வித்தியாசம்!

● பொன்விழி, அன்னூர்

? சடலத்தை மாற்றிக் கொடுத்த சென்னை பொதுமருத்துவமனை பற்றி...?

! அதைத் தோற்கடித்துவிட்டது சென்னை மனநல மருத்துவமனையில் நிலவிய அலட் சியம். மனநலமற்றவர்கள் நோயாளிகளா? அல்லது அவர்களைப் பராமரிப்பவர்கள் நோயாளிகளா என்றுகூட சிந்திக்க வைத்து விட்டார்கள்!

● வே. சித்ரா, கும்மிடிப்பூண்டி

? சென்னை மாநகரில் மழைநீர் விரைவாக வடியாமல் இருப்பதற்கு என்ன காரணம்?

! வடிகால்களில் ஆக்கிரமிப்பை அனு மதிக்கும் லஞ்சப் பெருமழை; ஊழல் வெள்ளம்.

● இரா. சக்கரபாணி, மதுரை

? பொதுப் பாடத்தை எளிமையாக்கி, விருப்பப் பாடத்தை மட்டும் சி.பி.எஸ்.ஈ பாடத் திட்டத்துக்கு இணை யாக மாற்றுவதுதானே நம் மாணவர்களுக்கு நல்லது. மாறாக, கடினமான பாடங் களை ஒட்டுமொத்தமாகப் பாடத் திட்டத்திலிருந்து நீக்கி விட்டிருக்கிறார்களே? நம் மாணவர்கள் வெளி மாநி லங்களுக்குச் சென்றால் பாதிக் கப்படுவார்களல்லவா?

! அகில இந்திய ரீதியில்

✱ ஸ்பெக்ட்ரம் மாளிகை!



**- தராசு**

நமது கல்விமுறை, பாடத் திட்டங்களில் நிறைய சீர்திருத்தங்கள் செய்ய வேண்டிய அவசியம் இருக்கிறது. ஆனால் அது நடக்காத வரை, இன்றுள்ள கல்வித் திட்டத்தின் அடிப்படையில் பார்க்கும்போது, உங்களுடைய கருத்து முற்றிலும் சரியானது.

● அ. யாழினி பர்வதம்,
சென்னை - 17

**? இலங்கைத் தமிழர்கள் பரிதவிக்கும் போது, இயக்குநர்**





★ ரசனைச் சித்திரங்கள்!

**சீமான் வீட்டில் பிரபாகரன் பிறந்தநாளுக்கு பிரியாணி விருந்து நடந்ததாமே? அதில் காவல் துறையினரும் கலந்து கொண்டார்களாமே?**

! இப்படி ஒரு பிளேட் பிரியாணிக்காக நாட்டுப் பற்றை அடகுவைக்க காவல்துறை சீமான்கள் தயாராக இருக்கிறார்கள் என்றால், காரணம், தலைமை இதற்குத் தலையசைத்து எதிர்ப்பு காட்டாது; தலையாட்டி ஊக்குவிக்கும் என்கிற துணிவுதான். அபாயமும் அதுதான்.

● க.நா. இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்

**? இனிமேல் தாஜ், ஒபராய் ஹோட்டல்களில் பழைய மாதிரி மக்கள் தங்குவார்களா?**

! கணிசமான அயல்நாட்டவர் இந்தியா பயணத்தை ஏற்கெனவே ரத்து செய்து விட்டனர். நமது விடுதிகள், விமான - ரயில் நிலையங்கள் பத்திரமானவை; நமது தேசம் பாதுகாப்பானது என்ற நம்பிக்கை மறுபடியும் தோன்ற நீண்ட காலமாகும். இந்தக் கால அவகாசம் அதிகரித்துக் கொண்டே போகாமல் தடுப்பது, சிதம்பரத்தின் செயல்திறனையொட்டிய விஷயம்.

● பா. அசோக், திருவில்லிப்புத்தூர்

**? 'இந்தியாவில் ஊழலுக்கென்று விருது கொடுத்தால் அது ஜெயலலிதாவுக்குத்தான் பொருந்தும்' என்கிறாரே கருணாநிதி?**

! ராஜா கட்டித் தந்த 'ஸ்பெக்ட்ரம்' கண்ணாடி மாளிகையில் இருந்துகொண்டு கல்லெறிகிறார்.

● டி.கே. சுப்பிரமணியன்,
திருப்பரங்குன்றம் ★

**? திரைப்படங்கள் மக்கள் ரசனையை மாற்ற முடியும் என நம்புகிறீர்களா?**

! நிச்சயமாக. ஒலி - ஒளி ஊடகத்துக்கு இருக்கும் ஆற்றல் அபரிமிதமானது. கேளிக்கை நோக்குக்கு இடையூறு இன்றியே ரசனையை உயர்த்த முடியும். அத்தகைய இலக்கும் உயர் ரசனையும் படைத்தவர்கள் இன்று அத்துறையில் உள்ளனர் - ராதா மோகன், கௌதம் வாசுதேவ் மேனன், சிம்பு தேவன். இவர்களின் தொடர் முயற்சியால் இந்த வட்டம் விரிவடைய முடியும்.

● மு.ரா.பாலாஜி, கோலார்

**? தடை செய்யப்பட்ட விடுதலைப் புலிகள் தலைவர் பிரபாகரனின் பிறந்த நாளை உயர்நீதி மன்ற வளாகத்தில் வழக்கறிஞர்கள் சிலர் கொண்டாடியிருக்கிறார்களே?**

! சிலை வைத்து, திறப்புவிழா நடத்தாமல் போனார்களே என்று சந்தோஷப்படுங்கள்! இவர்கள்தான் சட்டத்தின் மாட்சிமையைக் காக்கிறவர்கள்... வெட்கக்கேடு! ○

ரூ.100/- பரிசு பெறுபவர்:
**இரா. சக்கரபாணி, மதுரை**

★ ரூ.50/- பரிசு பெறுபவர்:
**டி.கே.சுப்பிரமணியம், திருப்பரங்குன்றம்**

# எல்லைகள் தடைகளாகா!

**ஒரு மனிதன் மகாத்மாவான கதை - சி. கஸ்தூரி ரங்கன், ஸ்வச்சித் அகாடமி, 4/39, 2வது குறுக்குத் தெரு, ஷெனாய்நகர், சென்னை - 30, விலை.ரூ.30/-**

மோகன் காந்தியின் குழந்தைப் பருவத்திலிருந்து தொடங்கி, இளம் பாரிஸ்டராகத் தென்னாப்பிரிக்காவில் தங்கி மக்கள் மத்தியில் உயர்ந்து மகான் காந்தியாக இந்தியா திரும்பும் வரையிலான வரலாற்று நிகழ்வுகள். காந்திய வழியில் நடப்புப் பிரச்னைகளுக்கான தீர்வுகளாக நூலாசிரியர் எழுதிய கட்டுரைகள் இரண்டு பின்னிணைப்பாக அமைந்துள்ளன. அரிய புகைப்படங்களுடன், காந்தி மகாத்மாவான சரிதத்தை எடுத்துரைக்கிறது இந்நூல்.




**தொடர்பு எல்லைக்கு வெளியே - ஆதலையூர் சூரியகுமார், பதியம், 251, பல்லடம் சாலை, திருப்பூர், விலை ரூ.60/-**

எளிய மொழியில் அமைந்த எழுபத்தொரு கவிதைகளின் தொகுப்பு. சில கவிதைகளின் நுட்பமான உணர்வுகள், சிலவற்றின் சொல் நேர்த்தி; பாடுபொருட்கள் - கவிதைக்கு எல்லைகள் தடையில்லை என விரிகின்றன. உள்ளடக்கம் இணைத்திருந்தால் இன்னும் சிறப்பு சேர்ந்திருக்கும்.



**வெற்றி உங்கள் விலாசம் தேடி வரும் - எஸ். சூரியமூர்த்தி, திருமகள் நிலையம், தியாகராயநகர், சென்னை - 17, விலை.ரூ.50/-**

ஆளுமைத் திறன், சுய மதிப்பு ஆகியவற்றை உயர்த்திக்கொள்வதன் மூலமும், அன்றாடப் பழக்க வழக்கங்களில் மேற்கொள்ளும் சில மாற்றங்கள் மூலமும் நமது இலக்கை அடையமுடியும் எனக் கூறும் பதினாறு கட்டுரைகள் அடங்கிய நூல். மனப்போக்கில் மாற்றம் விரும்புவோர்க்கு இந்நூல் ஒரு வழிகாட்டி.




- நேயமுகில்

12 ஸ்ரீ லலிதா மூன்றாம் பாகம்

ஆகாயத்தில் நாதம் தோன்றியது. அது நம் செவிப்புலனால் உணரப்படக்கூடியது. அடுத்ததாகத் தோன்றிய காற்று செவியாலும் தொடு உணர்ச்சியாலும் உணரப்படக் கூடியது. அதற்கடுத்து தோன்றிய நெருப்பு கண்ணாலும் காணப்படக்கூடியது; தொடு உணர்வினாலும் செவிப்புலனினாலும் அதனை உணர முடியும். நீர் ஓடினால் சள சள வென்று ஓசை கேட்கும்; அதைத் தொட்டுணர முடியும்; காண முடியும் என்பதோடு அதன் சுவையையும் பருகி உணர முடியும். இதற்கும் அடுத்தாற்போல் தோன்றிய மண்ணுக்கு இந்த நான்கு குணங் களுடன் கந்தம் என்கிற மணமும் ஐந்தாவ தாக அமைந்திருக்கிறது. இந்தப் பஞ்சபூதங் களுக்கும் அவற்றின் குணங்களுக்கும், ஆதார சக்கரங்களுடன் தொடர்பு உண்டு.

அது மட்டுமல்ல, ஒவ்வொரு ஆதார சக்கரத்துக்கும் ஒரு தேவதை உண்டு - டாகினி என்று ஒருத்திக்குப் பெயர். இன் னொருத்தி ராகிணி, அப்புறம் லாகினி - இப்படி இருக்கக்கூடிய தேவதைகள் ஒவ் வொருவருக்கும் முகங்களின் எண்ணிக்கை மாறும். - 'வதனைக ஸமந்விதா' என்று ஒரு முகம் உடைய தேவதை; 'வதன த்வயா' என இரண்டு முகங்கள் உடைய தேவதை- இப்படி மாறுபடும். இந்த முகங்களினு டைய எண்ணிக்கை ஒன்றிலிருந்து ஆரம் பித்து, வரிசைக் கிரமமாக அமைய வேண் டும் என்பதற்காகவும் ஆதார சக்கரங்களின் கிரமத்தை மாற்றிக்கொண்டார்கள். ஆத லால்தான், ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்திலும் ஆதார சக்கரங்களின் வரிசை மூலாதாரத் தில் ஆரம்பிக்காமல் விசுக்தியில் ஆரம்பிக் கிறது. ஆரம்பித்து, ஒவ்வொரு சக்கரத்துக்கும் உரிய தேவதை, அந்தத் தேவதையின் குணம், அவளுக்கு எத்தனை முகங்கள், அந்த குணத்தின் மூலமாக அவள் எதை அருள் கிறாள் என்று விவரமாகச் சொல்கிறது.

# அச்சம் தந்து அருள்பவள்

ஆசார்யர் ஆதிசங்கரர் பாடுகிறபோது மூலாதாரத்தில் ஆரம்பித்துப் பாடுவார். ஆனால், அதற்கப்புறம் மணிபூரகம் என்று மாற்றி, அதன்பிறகு ஸ்வாதிஷ்டானத்தைச் சொல்லி மீண்டும் கிரமத்துக்கு வந்து விடுவார். ஆதார சக்கரங்களுக்கும் பஞ்ச பூதங்களுக்குமான தொடர்பை உணர்த்தவே இப்படி மாற்றிப் பாடுகிறார்.

மூலாதாரம் - முதல் சக்கரம் - ப்ருத்வி அல்லது மண்(நிலம்) ஸ்தானம். ஸ்வாதிஷ் டானம் - அக்னியின் ஸ்தானம். மணிபூரகம்- ஜல (நீர்) ஸ்தானம். பஞ்ச பூதங்கள் தோன்றிய வரிசை என்பதோ ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், பூமி! கீழிருந்து மேல் நோக்கி இந்த வரிசைப்படி அமைவதற்காக, ஆசார் யர் முதலில் மூலாதாரத்தைக் குறிப்பிட்டு,

சுதா சேஷய்யன்

நீருக்குரிய மணிபூரகத்தைச் சொல்லிவிட்டு அதற்கப்புறம், நெருப்புக்குரிய ஸ்வாதிஷ்டானத்தைக் குறிப்பிடுகிறார்.

## பஞ்ச இந்த்ரியங்களும் ஆதார சக்கரங்களும்

பஞ்ச பூதங்களுக்கும் ஆதார சக்கரங்களுக்கும் தொடர்பு இருப்பது போல, அவற்றுக்கு பஞ்ச இந்த்ரியங்களோடும் தொடர்பு உண்டு. இவற்றின் இயக்கங்கள் ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்தவை.

முதல் முதலாக ஆகாசம் தோன்றியது என்று பார்த்தோம். அதன் குணம் நாதம். நாதம் என்பது கேட்கப்படுவது - செவிப்புலனுக்கு உரிய அம்சம். ஆகவே செவியால் கேட்கும் புலன் என்பது ஆகாசம் என்ற பஞ்சபூதத்தோடு தொடர்புடையது.

அடுத்ததாக வரக் கூடியது காற்று. அதற்குரிய விசேஷ குணம் ஸ்பரிசம். அந்த ஸ்பரிசத்தை உணர்வதற்காக ஏற்பட்ட தொடு உணர்வு என்கிற புலன், பஞ்சபூதங்களுள் காற்றோடு தொடர்பு உடையது.

அடுத்து வந்தது அக்னி - அதைப் பார்க்க, அதன் ஓசையைக் கேட்க முடியும். அதனைத் தொட்டுணரவும் முடியும். பார்க்கக்கூடிய வடிவம் என்ற சிறப்புத் தன்மை நெருப்புக்கு இருப்பதால் அது கண் பார்வை என்ற புலனோடும் கண் என்கிற இந்த்ரியத்தோடும் தொடர்பு உடையது.

தண்ணீரின் கூடுதல் குணம் சுவை. ஆகவே நாவினோடு இதற்குத் தொடர்பு உள்ளது.

மண் அல்லது ப்ருத்விக்குச் சுவை என்பதோடு மணம் அல்லது கந்தம் என்கிற தன்மையும் இருப்பதால் நாசி என்கிற இந்த்ரியத்தோடு அது தொடர்புடையதாக இருக்கிறது.

இந்தப் பஞ்ச பூத வரிசைக் கிரமத்தைக் கடைப்பிடிக்க விரும்பித்தான் ஆசார்யர் ஆதிசங்கரர் ஆதார சக்கரங்களின் வரிசையைச் சற்று மாற்றினார். 'மஹீம் மூலாதாரே' என்று ஆரம்பித்து, ஸ்வாதிஷ்டானத்துக்குப் போகாமல் மணிபூரகத்துக்குப் போனார். அதன் பிறகு ஸ்வாதிஷ்டானம், அனாஹதம், விசுத்தி, என்று மற்ற பூதங்கள்- புலன்கள். இந்த ஐம் புலன்களையும் தாண்டி 'ப்ரு



மத்யே' என்று புருவங்களின் மத்தியில் உள்ள ஆக்ஞா சக்கர ஸ்தானத்தைக் குறிப்பிட்டார். இந்த ஆதார சக்கரம் மனம் என்கிற ஆறாவது அறிவுக்கான ஸ்தானம். இத்தனை ஸ்தானங்களையும் கடந்து, குண்டலினி சக்தியானது, ஆதார சக்கரங்களைத் துளைத்துக்கொண்டு மேலே எழுந்து, கடைசியில் சஹஸ்ரார கமலம் என்ற உச்சி ஸ்தானத்தை அடைகிறது. அதுவே சிவ-சக்தி

ஐக்கிய ஸ்தானம்.

## விசுத்தி சக்கரம்

**ஸ்ரீ** லலிதா சஹஸ்ரநாமத்தில் இடம் பெற்றுள்ள வரிசைக் கிரமத்தைப் பார்ப் போம்:

மூலாதாரத்தில் ஆரம்பிக்காமல் **விசுத்தி சக்ர நிலையா** என்று ஆரம்பிக்கிறது.

**ரக்த வர்ணா, த்ரிலோசனா** என்பவை இதனைத் தொடரும் நாமங்கள். அதன் பின் அவள் கையில் இருக்கக்கூடிய ஆயுதங்கள் என்னென்ன என்பதெல்லாம் வரும். இந்த முறையில், அந்தந்த ஆதார சக்கரத்தில் அம்பாள் அந்தந்த தேவதை ஸ்வரூபமாக இருப்பதை வழிபடுவது ஒருவிதமான யோகம். இதற்கு யோக ந்யாஸம் என்று பெயர்.

**விசுத்தி** சக்கரத்தில் ஸ்திரமாக இருப்பவள் **ரக்த வர்ணா** - சிவப்பு நிறத்தினள்; **த்ரிலோசனா** மூன்று கண்களை உடையவள்.

**கட்வாங்காதி ப்ரஹரணா** - கையிலே அவள் தாங்கியிருக்கக்கூடிய ஆயுதத்தைக் குறிப்பிடுகிறது. கட்வாங்கம் என்பது ஒரு பெரிய தண்டம் (கோல்). சில சமயங்களில், அதன் நுனியிலே ஒரு கபாலம் (மண்டை ஓடு) இருக்கும்.

**வதனைக ஸமன்விதா** - ஒரு திருமுகம் படைத்தவள்.

இந்த தேவதா ஸ்வரூபத்துக்கு என்ன பிடிக்கும்? எது ப்ரீதியான நிவேதனம்? **பாயஸான்ன ப்ரியா!** பாயஸம் அவளுக்குப் ப்ரீதியானது. கடைசியில் இது எதில் வந்து முடியும் என்றால், சஹஸ்ரார கமலத்தில் இருக்கக் கூடிய அம்பாளுக்கு எல்லாமே பிடிக்கும் என்பதாக முடியும்!



**த்வக்ஸ்தா** - த்வக் என்பது தோல் - சருமம். பஞ்ச பூதங்களோடு தொடர்புடைய நமது உடலின் பல்வேறு சேர்க்கை அம்சங்கள் இருக்கின்றனவே. அவற்றுக்கு அந்தந்த ஆதார சக்கரத்து தேவதை, அதி தேவதையாக் இருக்கிறாள்.

விசுத்தி சக்கரத்து தேவதை, **த்வக்ஸ்தா**வாக தோலுக்கு அதி தேவதையாக விளங்குகிறாள்.

அடுத்து வரும் திருநாமம் **பசுலோக பயங்கரி.** பசுக்களாக இருக்கக்கூடிய ஜீவ கூட்டங்கள் தவறு செய்யாமல் இருப்பதற்காக, அவர்களுக்கு பயத்தை ஏற்படுத்தக் கூடியவள்; அதே சமயத்தில் அவளை அடைந்து வேண்டுவோருக்கு அச்சத்தைப் போக்கவும் கூடியவள்.

அந்த தேவதையே **அம்ருதாதி மஹா சக்தி ஸம்ருதா, டாகினீஸ்வரி.** - அவளுக்கு டாகினீஸ்வரி என்று பெயர். அம்ருதா என்கிற சக்தி தொடங்கி, பல சக்திகள் புடை சூழ இருக்கக்கூடியவள் டாகினி. இந்த சக்திகள் வடமொழி அக்ஷரங்களின் எண்ணிக்கையைக் குறிக்கிறார்கள். அம்ருதா என்கிற சக்தி 'அ' என்ற எழுத்துக்கு உரியவள். அதில் தொடங்கி பதினாறு எழுத்துக்களுக்கான பதினாறு தேவதைகள் அம்பாளைச் சூழ்ந்திருக்கிறார்கள். இதன் குறியீடாக, பதினாறு தள தாமரையில், விசுத்தி சக்கரத்தில் காணப்படுகிறாள் அம்பாள்.

அடுத்து வரும் ஆதார சக்கர ஸ்தானங்களுக்குரிய தேவதைகளையும் இதர அம்சங்களையும் தொடர்ந்து பார்ப்போம்.

***(வளரும்)***

பல்வேறு சமூகப் பிரச்னைகளை விவாதிக்கும், விஜய் டி.வி.யின் நீயா? நானா? நிகழ்ச்சி சமீப காலமாக, குடும்பப் பிரச்னைகளைப் பேசும் பஞ்சாயத்து மேடையாக, சின்ன விஷயத்தைப் பூதாகாரமாக காட்டும் ஊடக பூதமாய் மாறி வருவதாக சர்ச்சை கிளம்பியுள்ளது. இதைப் பற்றிய கேள்விகளுடன், இந்நிகழ்ச்சித் தொகுப்பாளர் கோபிநாத்தைச் சந்திக்கையில்...




**நீயா? நானா? நிகழ்ச்சி குடும்பப் பிரச்னைகளை, குறிப்பாக கணவன் - மனைவி உறவுச் சிக்கல்களை எல்லைமீறி விவாதிப்பதாகக் கருத்து நிலவுகிறதே?**

''இது தவறான கருத்து. இரண்டு வாரங்கள் தொடர்ந்தாற்போல் குடும்பத் தலைப்புகள் இடம்பெற்றதால் பலமுறை விவாதிப்பதைப் போலத் தோன்றியிருக்கலாம்.

குடும்ப அமைப்புதான் இன்றளவிலும் கூட இந்தியாவின் ஆணிவேராக விளங்குகின்றது. கூட்டுக்குடும்பம் - தனிக் குடித்தனம், சகோதரர்களிடையேயான பிரச்னைகள், பெற்றோர்கள் - குழந்தைகள், இந்த வரிசையில் கணவன், மனைவிக்கிடையேயான பிரச்னைகளும் விவாதிக்கப்படுகின்றன. தம்பதிகளுக்கிடையே உறவுகளில் ஏற்படும் சிக்கல்களை மனோதத்துவ ரீதியாக அணுகுகின்றோம். எல்லை மீறி எந்த ஒரு விஷயமும் விவாதிக்கப்படுவதில்லை.''

**தம்பதிகளுக்கிடையேயான தாம்பத்தியப் பிரச்னைகளும் நீயா? நானா?வில் விவாதிக்கப்படுமா?**

''அதற்கான மேடை இது அல்ல.''

**உங்கள் நிகழ்ச்சியில் பங்குபெறும் தம்பதிகள், சகோதரர்கள் ஒருவரையொருவர் குற்றம் சுமத்துகிறார்களே? அவர்களின் நிஜவாழ்க்கையில் இது கசப்புணர்வை ஏற்படுத்தாதா?**

''சில வாரங்களுக்கு முன் ஐ.டி. - ஐ.டி. இல்லாத சகோதரர்கள் விவாதத்தில் கலந்து கொண்டனர். ஐ.டி.யில் பணிபுரியாத, குறைவாகச் சம்பாதிக்கும் அண்ணன், ஐ.டி.யில் பணிபுரியும் தம்பியைப் பார்த்து, இவனைப் பார்த்தா வயித்தெரிச்சலாக இருக்கு' என்றார். அதற்கு தம்பி 'முட்டாளுக்கு வயித்தெரிச்சலாகத்தான் இருக்கும். அவர்களால் அதிகம் சம்பாதிக்க முடியாது' என்றான். இவ்வளவு கோபத்தோடு பேசிய சகோதரர்கள் நிகழ்ச்சியின் இறுதியில் கட்டித் தழுவி ஆனந்தக் கண்ணீர் விட்டனர். இந்தப் புரிதலைத்தான் எல்லா உறவுகளுக்குள்ளும் கொண்டுவர முயற்சிக்கிறேன். எல்லா உறவுகளுக்குள்ளும் கோபம், பொறாமை, அன்பு, பாசம், காதல் எனப் பல உணர்வுகள் பின்னிப் பிணைந்திருக்கின்றன. இந்த உணர்வுகளை வெளிப்படுத்தும் மேடையாகத்தான் இதைப் பார்க்கிறேன். இதனால் உறவுகளுக்குள்ளிருக்கும் கசப்புணர்வு வெளியே கொட்டப்பட்டு, அன்பு மீண்டும் பெருக்கெடுக்கும் என்றுதான் நினைக்கிறேன்.''

# குடும்பத்துக்குள் குத்துச்

**குழந்தைகள் விரும்புவதையெல்லாம் பெற்றோர்கள் செய்து தர வேண்டும் என்பது போல நீயா? நானா?வில் காட்டியிருக்கிறீர்களே?**

''கணவன் - மனைவி இருவருமே வேலைக்குச் செல்லும் வீடுகளில், பெற்றோர்கள் குழந்தைகளின் உணர்வுகளைப் புரிந்து கொள்ளுங்கள் என்றுதான் அந்த நிகழ்ச்சியில் சுட்டிக்காட்டியிருக்கின்றேன்.

மேற்கத்திய நாடுகள் குடும்பக் கட்டமைப்பை இழந்துவிட்டு, கட்டடங்களைப் பாதுகாத்துக் கொண்டிருக்கின்றன. நமது நாட்டிலும் அதுபோன்ற சூழல் வந்துவிடக் கூடாது என்ற என் நோக்கத்தின் வெளிப்பாடுதான் அது.''

**நீயா? நானா? நவீன பட்டிமன்றமா?**

பட்டிமன்றம் என்பது ஏற்பாடு செய்யப்பட்ட நிகழ்ச்சி. நீயா? நானா?வில் கலந்து கொள்பவர்கள் எந்தவித ஏற்பாடுகளுடனும் வருவதில்லை. யாரேனும் ஒருவர் வரம்பு மீறிப் பேசும்போது அதைத் தடுத்து, தவறு என்று சுட்டிக்காட்டுவது நிகழ்ச்சியை வழங்குபவரின் கடமை. இதைத்தான் நீயா- நானா?வில் நான் செய்கிறேன். இதனால்,

# சண்டையா

பார்ப்பவர்களுக்குப் பட்டிமன்ற நடுவர் போல் நான் தோன்றலாம். நிகழ்ச்சியில் யாரேனும் ஒருவர் உக்கிரமாகப் பேசும்போது, அதை மாற்றுவதற்கு சிறிது நகைச்சுவையுடனும் பேசுகிறேன். நகைச்சுவை இருப்பதாலேயே அதைப் பட்டிமன்றப் பட்டியலில் சேர்க்கக்கூடாது.''

**- ராகவ்குமார்**



**'தவ்ஹீத் ஜமா அத்' என்ற அமைப்பு தமிழக இஸ்லாமியர்களிடையே செல்வாக்கு பெற்றது. குறிப்பாக இஸ்லாமியப் பெண்கள், இந்த இயக்க செயல்பாடுகளில் பெருமளவு பங்குகொள்கிறார்கள். இந்த அமைப்பின் உயிரோட்டமாக இருப்பவர் பி. ஜைனுல் ஆபிதின். அவருடன் ஒரு சந்திப்பு...**

**'இந்து மதம் சார்ந்தது' என்று சொல்லி மலேஷிய அரசு யோகாசனத்தைத் தடை செய்திருக்கிறதே?**

''அடிப்படையில் யோகாசனம் நல்ல உடல் மற்றும் மனப்பயிற்சி என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இஸ்லாத்தைப் பொறுத்தவரை பிரச்னை எங்கே வருகிறது என்றால், மதம் சார்ந்த விஷயங்கள் அதில் கலக்கப்படும் போதுதான். உதாரணமாக பிராணா யாமப் பயிற்சியைச் சொல்லலாம். ''ஓம்... ஓம்'' என்று சொல்லி இந்த மூச்சுப் பயிற்சியைச் செய்ய வேண்டும் என்று சில யோகாசன ஆசிரியர்கள் சொல்கிறார்கள். இது தவிர, புராண விஷயங்களையும் மிக்ஸ் செய்கிறார்கள். 'இறைவன் ஒருவனே' என்ற ஏகத்துவ தத்துவத்தைக் கடைப்பிடிக்கும் இஸ்லாமியர்களுக்கு, யோகாசனத்தில் மதத்தைக் கலக்கும்போது அதைக் கடைப் பிடிப்பது சாத்தியமில்லாமல் போகிறது. நாலைந்து ஆசனங்களில் இப்படி மதத்தைக் கலப்பது நடக்கிறது. மற்ற ஆசனங்கள் ஒரு பிரச்னையுமில்லை. யோகாசனம் கற்றுக் கொள்ள ஆர்வத்துடன் செல்லும் இஸ்லாமியர்கள் பின்வாங்கக் காரணம் இதுதான்.''

**ஒழுக்கக்கேடுகள் நிறைந்த மைக்கேல் ஜாக்சனை இஸ்லாம் மதத்தில் சேர்த்துக் கொண்டது சரியா?**

மைக்கேல்ஜாக்சன் - இவர் ஒழுக்கக் கேடாக வாழ்க்கையை நடத்தியிருக்கிறார் என்பதில் கருத்து வேற்றுமை கிடையாது. ஆனால், ஒரு மனிதன் திருந்தி வருவதை



★ மிகாயீல்



★ ஒபாமா

ஏற்றுக்கொள்ள வேண்டும். எல்லா மதங்களிலும் இது நடக்கிறது. மைக்கேல் ஜாக்சன் புகழ்பெற்றவராக இருப்பதால் அவரைப் பற்றித் தெரிகிறது. பாப் பாடகர் கேட் ஸ்டீவன்சன், குத்துச் சண்டை வீரர் முகமது அலி, எழுத்தாளர் கமலாதாஸ் ஆகியோர், இஸ்லாத்தின் கொள்கைகளை ஏற்று இணைந்து, நல்ல வாழ்க்கையை நடத்தி வருகிறார்கள். அதுபோலத்தான் மைக்கேல் ஜாக்ஸனும் இஸ்லாமில் சேர்ந்து மிகாயீல்

ஆக மாறியிருக்கிறார்.''

**ஒபாமா, தன்னை இஸ்லாமில் இணைத்துக் கொள்ள வேண்டும் என்று மதவாதிகள் சொல்கிறார்களே?**

''நீங்கள் கேட்டதால் சொல்லுகிறேன். ஒபாமாவின் தாயும், தந்தையும் சட்டபூர்வமான திருமண வாழ்க்கை மேற்கொண்டவர்கள் அல்ல. அவர்கள் கம்பேனியனாக வாழ்ந்து பிறந்தார் ஒபாமா. அவரது அப்பா, அம்மாவை விட்டுப் பிரிந்த பின் அம்மா, மீண்டும் மறுமணம் (அவரும் இஸ்லாமியர்) செய்து கொண்டார். ஆனால் ஒபாமா, தாய் வழிப் பாட்டியால் ஒரு கிறித்துவராகவே வளர்க்கப்பட்டார். கிறித்துவ மிஷனரியிலும் வேலை செய்திருக்கிறார். பிறப்பின் அடிப்படையில் ஒருவர் தன்னை முஸ்லிம் என்று உரிமை கொண்டாட



# யோகாவுக்குத் தடா!

முடியாது. அவரே தன்னை கிறித்துவர் என்று சொன்ன பிறகு யாரும் அவரைக் கட்டாயப்படுத்தக் கூடாது.''

**பெருகிவரும் தீவிரவாதச் சூழலில் முஸ்லிம்களின் பொறுப்பு என்ன?**

''அதிகாரத்தில் உள்ளவர்களுக்குத்தான் பொறுப்பு வேண்டும். நாங்கள் பொறுப்போடுதான் இருக்கிறோம். தீவிரவாதிகளுக்கோ, தீவிரவாதத்துக்கோ நாங்கள் சிறிதும் இடம்கொடுப்பதில்லை. நம் தென்காசியிலேயே ஆர்.எஸ்.எஸ். அலுவலகத்தின் மீது குண்டு வீசி மாட்டிக் கொண்ட குமாரபாண்டியன் இந்து முன்னணி. முஸ்லிம் மீது பழிபோடப் பார்த்தார்கள். கோயம்புத்தூர், குண்டு வெடிப்பில் கைது செய்யப்பட்ட முஸ்லிம்களுக்கு, எந்த முஸ்லிம் இயக்கமும் சட்ட உதவி செய்யவில்லை. ஆனால் மலேகான் விவகாரத்தில் இந்து அமைப்புகள் கைது செய்யப்பட்டவர்களுக்கு எல்லா உதவிகளும் செய்கின்றன. இது சரியா?

அரசியல்வாதிகளின் பிரித்தாளும் சூழ்ச்சியால் நடைமுறை வாழ்க்கையில் இன்னல்களை அனுபவித்து வரும் நாங்கள், தீவிரவாதத்தை ஆதரித்து அமைதியை இழப்போமா? நாங்கள் அகிம்சையின் அமைதியை விரும்புகிறோம்.

**- கௌசி**

உலகெங்கிலும் உள்ள மருத்துவ மனைகளின் முக்கிய சவால் எது தெரியுமா?

நோயாளிகளின் வியாதிகளைத் தீர்ப்பது என்கிறீர்களா? அதைவிட அதிக சவால் தங்களிடமுள்ள தொற்றுக்கள் (hospital induced infections). அங்கு வருபவர்களுக்குப் பரவி விடாமல் தடுப்பதுதான்.

'செவிலியர் திலகமான' ஃப்ளாரன்ஸ் நைட்டிங்கேல், 'மருத்துவமனைகளில் உள்ள சுகாதாரமற்ற காற்றும், அதிக நெரிசலும் பலவித நோய்களுக்குக் காரணம்' என்றார். தமது 'நோட்ஸ் ஆன் ஹாஸ்பிடல்' என்ற நூலில் 'சில வியாதிகளால்

# ஹாஸ்பிடல் எத்திக்ஸ்




ஜி.எஸ்.எஸ்.



மருத்துவமனையில் இறப்பவர்களின் எண்ணிக்கை, அதே வியாதிகளால் மருத்துவமனைக்கு வெளியே இறப்பவர்களைவிட அதிகம்' என்கிறார்! காரணம் மருத்துவமனைகளில் பரவிக்கிடக்கும் நோய்க்கிருமிகள்தான்.

'நோய்க்கான சிகிச்சைக்காக மட்டுமே குழந்தைகளும் முதியோரும் மருத்துவ மனைக்குச் செல்லவேண்டும். மற்றபடி உறவினர்களைப் பார்க்க என்பது போன்ற காரணங்களுக்காக அவர்களை மருத்துவ மனைக்கு அழைத்துச் செல்வது தவிர்க்கப் பட வேண்டும்' என்று டாக்டர்கள் கூறுவது இதனால்தான்.

இதன் காரணமாகவேதான் 'புற நோயாளி அறுவைச் சிகிச்சை' என்பது மேலைநாடுகளில் பெருகி வருகிறது. அதாவது அறுவைச் சிகிச்சையை முடித்துக் கொண்டு அன்றே வீட்டுக்குத் திரும்புவது. அமெரிக்காவில் உயிர்காக்கத் தேவைப்படும் உடனடி அறுவைச் சிகிச்சைகளைத் தவிர, பிற அறுவைச் சிகிச்சைகளில் அறுபது சதவிகிதம் இந்தப் பிரிவில் அடங்குகிறது.

இதற்கு இரண்டு முக்கியக் காரணங்கள். ஒன்று, முன்னேறிவிட்ட மருத்துவத் தொழில்நுட்பம். உடலில் சிறு துளை யிட்டே laparoscopic முறையில் அறுவைச் சிகிச்சைகளை நடத்திவிட முடிகிறது என்பதால் அது ஆறுவது வேகமாகிறது. மருத்துவமனையிலேயே தங்கவைத்துக் கண்காணிக்க வேண்டிய அவசியம் குறைகிறது.

மற்றொன்று, நோயாளி அனாவசியமாக அதிக நாட்கள் தங்கி மருத்துவமனைக்கு அதிகத் தொகை கொடுக்க வேண்டாம் என்பது. இந்தக் காரணத்துக்காகவே சில மருத்துவமனைகள் இதில் மாறுபட்டு யோசிக்கின்றன.

காடராக்ட் அறுவைச் சிகிச்சை போன்ற ஒருசில அறுவைச் சிகிச்சைகளுக்கு மட்டுமே, அதே நாளில் நோயாளிகள்



சட்டம் இருக்கிறது!

இதற்கு மாறாக ஓர் அவலமும் உண்டு. ஒரு நாளாவது மருத்துவமனையில் தங்கியிருந்தால் மருத்துவமனைத் தொகை ஊழியருக்கு ஈடுசெய்யப்படும் என்று சில அலுவலகங்களில் விதி இருப்பதால், ஒரு நாளாவது தங்க வேண்டும் என்று அந்த ஊழியர் கேட்டுக் கொள்வதும், அப்படித் தங்கவில்லையென்றாலும் தங்கியதாக ஒரு சான்றிதழை மருத்துவமனை அளிப்பதும் கூட இங்கு பரவலாகி வருகிறது!

நோயாளியின் உடல்நிலை ஓரளவு சீரானவுடன் தீவிர சிகிச்சைப் பிரிவிலிருந்து அவரை பொதுப் பிரிவுக்குக் கொண்டு சென்றுவிட வேண்டும். ஆனால் பல மருத்துவமனைகளில் அப்படி நடப்பதில்லை.

# சிகிச்சையே நோயா?

அபாய கட்டத்தைத் தாண்டிய பிறகும், அவர்களை ஐ.சி.யு.விலேயே வைத்திருக்கிறார்கள். காரணம், தீவிர சிகிச்சைப் பிரிவில் தங்க, வாடகை (பொதுப் பிரிவை விட) சுமார் நான்கு மடங்கு அதிகம்.

வீட்டுக்கு அனுப்பப்படுகிறார்கள். பல மருத்துவமனைகளில், நோயாளிகளைத் தேவையின்றி, அதிக நாட்களுக்குத் தங்கள் மருத்துவமனையில் தங்க வைப்பதை வழக்கமாக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

பெரும்பாலான மருத்துவமனைகளில் எவ்வளவு எளிமையான அறுவைச் சிகிச்சை என்றாலும், குறைந்தது இரு நாட்களுக்காவது மருத்துவமனையில் இருக்கச் செய்யவேண்டும் என்கிற எழுதப்படாத

இந்திய மருத்துவ நன்னெறி இதழில் (Indian Journal of Medical Ethics) மும்பையைச் சேர்ந்த டாக்டர் ரத்னா மகோத்ரா என்பவர் இப்படிக் குறிப்பிடுகிறார்:

'மிக சீரியஸான நோய்களில் சுமார் முப்பது சதவிகிதம், மருத்துவமனையில் அளிக்கப்படும் சிகிச்சையின் காரணமாகவே உண்டாகிறது. இவற்றை 'டாக்



**மிக சீரியஸான நோய்களில் சுமார் முப்பது சதவிகிதம், மருத்துவமனையில் அளிக்கப்படும் சிகிச்சையின் காரணமாகவே உண்டாகிறது.**

டரின் செயலால் உண்டாகும் சிக்கல்கள்' (Iatrogenic complications) என்பது வழக்கம். இதன் காரணமாக மருத்துவமனையில் தங்கும் நாட்கள் அதிகமாகின்றன. நோயாளி செலவழிக்க வேண்டிய தொகையும் கணிசமாக அதிகரிக்கிறது. சில சமயம் உயிருக்கே ஆபத்து ஏற்படலாம்.

ஆனால் அதை டாக்டர்கள் ஒப்புக் கொள்வது அரிது. இந்தச் சிக்கல்களைக் களைய புதிய அறுவைச் சிகிச்சைகளையும் மேற்கொள்கிறார்கள்! தங்கள் தவறினால் உண்டான சிக்கல்களைத் தீர்க்க, குறைந்த பட்சம் அதிகப்படி தொகையைப் பெறாமல் இருக்க வேண்டும் என்று கூட அவர்கள் நினைப்பதில்லை.'

**அ**றுவைச் சிகிச்சைகளில் நடைபெறும் மற்றோர் அவலத்தை, ஒரு மருத்துவர் வேதனையுடன் நம்மிடம் இப்படிப் பகிர்ந்து கொண்டார்:

''அறுவைச் சிகிச்சைக்குத் தேவைப்படும் பல கருவிகளின் மீது உச்சபட்ச விலை (MRP) என்பதைக் குறிப்பிடுவதில்லை. எனவே மருத்துவமனைகள் இஷ்டத்துக்கு விலையை நிர்ணயிக்க முடிகிறது! முக்கியமாக ரத்தக்குழாய்களில் செலுத்தப்படும் சிறு கம்பிகளில் (Vascular Catheters) விலையை எக்கச்சக்கமாக ஏற்றிவிடுகிறார்கள்.''

*(தொடரும்)*

''டாக்டர், ஆபரேஷனைத் தவிர வேற வழியில்லையா?''

''இருக்கே! தற்கொலை பண்ணிக்கலாம்.''

– வி. சாரதி டேச்சு



**ஜே.எஸ்.ராகவன்**



# காபி நாராயணி!

(கூகுளை நாகூர் ஆடாக மேய்ந்து கொண்டிருக்கிறான் பத்ரி. காராபூந்தித் தட்டுடன் பார்வதி வருகிறாள்.)

பார் : (கேலியாக) ஏதோ ஸிம்காவோ, கனகாவோ, அதிலே பேர் வரணும்னு லாப் டாப்பே கதின்னு உக்கார்ந்து இருக்கியா? உன்னைச் சொல்லிக் குத்தமில்லை. எல்லாம் குல வழக்கம்.

பத்ரி : குல வழக்கமா? எப்படி?

பார் : உன்னோட தாத்தா சதா ஆர்மோனியம் முன்னாலே உக்கார்ந்து ஊர்க் காதுகளைக் கிழிச்சிண்டு இருந்தார். உங்கப்பா வெத்திலைச் செல்லம் முன்னாலே உக்காந்திண்டு முப்பத்திரெண்டு பல்லையும் அழிச்சிண்டு இருந்தார். நீ இது முன்னாலே உக்காந்து ரெண்டு கண்ணையும் கெடுத்துண்டு இருக்கே.

பத்ரி : இதோ மூடிட்டேம்மா. காராபூந்திக்குப் பக்கவாத்தியமா கெட்டித் தயிர் இருந்தா செம்மங்குடியா ருசிச்சுச் சாப்பிடுவேன்.

பார் : செம்மங்குடியை விடுடா. நீ குடியும் குடித்தனமுமா ஆகற வழியைப் பாரு.

பத்ரி : அது என் கையிலே இல்லேம்மா. ஞாயிற்றுக் கிழமை மூணு மணிக்கு ஒரு டெலிஃபோன் இண்டர்வியூ. பொண்ணு பேரு நாராயணி. என்னென்ன கேள்வி எல்லாம் கேக்கப் போறாளோ? தெரியலே.

பார் : (பெருமூச்சு விட்டு) நல்ல கூத்துடா. காலம் காலமா பிள்ளை தான் பெண்ணைப் பார்க்கப்போய், சொஜ்ஜி, பஜ்ஜி, பாட்டு, ஊருக்குப் போய் லெட்டருங்கிற சம்பிரதாயத்தோட கல்யாணத்தைப் பண்ணிப்பான். இப்போ அப்படியா? பொண்ணு பிள்ளையை இண்டர்வியூ பண்ணுவாளாம். பிடிச்சிருந்தா ஆம்படையானா அப்பாயிண்ட் பண்ணுவாளாம். என்னடா இது?

பத்ரி : சப்ளை அண்டு டிமாண்டு தியரின்னு சொல்றதும்மா. இப்போ

## தூறல் கவிதை!

திசையற்று அலையும்
மேகங்களில்
எழுதிக் கிடக்கிறது
பசையற்ற வயல் பயிரின்
வயது!

பெண்கள் குறைவுங்கிறது பரவலா ஒரு கருத்து. நேத்து பேசின புஷ்பா என்னை என்ன கேட்டா தெரியுமா?

பார் : பிடிப்பு போக மீதிச் சம்பளம் எவ்வளவு? உன்னோட வாகனத்துக்கு ரெண்டு சக்கரமா இல்லாட்டி நாலா? கள்ளு குடிப்பியா? சுருட்டு பிடிப்பியா? சிநேகிதிகள் உண்டா? இதானே?

பத்ரி : டும் டும் டாட் காம்லே ஏற்கெனவே விவரமா இருக்கிற அதெல்லாம் ஸ்க்ரீனிங் ஆகி ஓ.கே. ஆன அப்புறம்தான் இந்த இண்டர்வியூ.

பார் : பின்னே என்ன கேட்டா?

பத்ரி : உனக்கு அப்பா கிடையாதே. நீ ஒரே பிள்ளை ஆச்சே. கல்யாணம் ஆனா உன் அம்மா எங்கே இருப்பான்னு கேட்டா?

பார் : (பதறி) என்னடா இது? ரயில் பொட்டியா என்னைக் கழட்டி விட்டுட்டா நா எங்கேடா போவேன்?

பத்ரி : நானும் கேட்டேன். அந்தக் கேள்விக்குப் பதிலா, இ.மெயிலிலே விவரமான ஓல்டு ஏஜ் ஹோம் லிஸ்ட் ஒண்ணை அனுப்பி இருக்கா.

பார் : (பீதியுடன்) நீ என்னடா சொன்னே?

பத்ரி : நோ தாங்க்ஸ்"ன்னு கழண்டுட்டேன். ஆனா ஒண்ணு! கல்யாணத்துக்கு முன்னாடியே க்ளியரா சொல்லிட்ட அவள் தெய்வம்! பாக்கிறதுக்கு லட்டு மாதிரி இருந்தா. ஆனா ஒட்டாத காராபூந்தி.

### 2

*(பத்ரியின் செல்ஃபோன் கிர்ரென்ற சத்தத்துடன் அரை வட்டம் அடிக்கிறது)*

பத்ரி : ஹாய்! சொல்லு நாராயணி.

நாரா : மியூசிக் அகாடமியிலே ஆக்ஸிடெண்டா மீட் பண்ணி, கூட்டணித் தலைவர்களா முதல் கட்டப் பேச்சு வார்த்தை நடத்தியாச்சு. இரண்டு பாயிண்ட் பாக்கி இருக்கு.

பத்ரி : சொல்லு.

நாரா : உன்னை அமெரிக்காவுக்கு அனுப்பினா நான் வரமாட்டேன். அங்கே நம்மளே பாத்ரூம் எல்லாம் க்ளீன் பண்ணணுமாமே? உவ்வே. என்னாலே முடியாது.

பத்ரி : ஒபாமாவே மிஷல் சமேதரா வந்து என்னை வருந்திக் கூப்பிட்டாக்கூட நான் அமெரிக்கா போறதா இல்லே.

நாரா : குட்! அடுத்ததா, எனக்குக் காபி வாசனைன்னா பிடிக்கவே பிடிக்காது. கல்யாணம் ஆனப்பறம் என்னைக் குடிக்கச் சொல்லி, போடச் சொல்லிக் கட்டாயப்படுத்தக் கூடாது.

பத்ரி:மைகாட்!கா-பி-பி-டி-க்-கா-தா? கிழிஞ்சது. என் உடம்பிலே ஓடறதே அதானே? வெயிட். என்னோட ஒரு கண்டிஷனையும் சொல்லிடறேன்.

நாரா : என்ன பத்ரி?

பத்ரி : எங்கம்மா நம்மோட இருக்க மாட்டா. ஓல்டு ஏஜ் ஹோமுக்குப் போயிடுவா. உனக்கு பிராப்ளம் ஒண்ணும் இல்லையே?

நாரா : வாட்! ஆர் யூ மேட்? வயசான உங்கம்மா ஏன் அங்கே எல்லாம் போய் இருக்கணும். நம்மோட இருக்கட்டும்.

உதவியா இருக்கும். எனக்கு மாகிகூட பண்ணத் தெரியாது.

பத்ரி : காபி இல்லாத வீட்டில் அம்மா குடியிருக்கமாட்டா. 'வாசலுக்குத் தேவை கோலப் பொடி, கிச்சனுக்குத் தேவை காபிப் பொடி'ன்னு அடிக்கடி சொல்லுவா. உனக்குக் காபி வேணாம்னா நம்ம கல்யாணமும் வேணாம். யோசிச்சு முடிவுக்கு வா. பைத வே, நேத்து சுதா பாடின ராகம் ஷட்விதமார்கிணி.

3

*(கல்யாணப் பத்திரிகையை பத்ரி எழுத ஆரம்பிக்கிறான்)*

பத்ரி : குற்றப் பத்திரிகையிலே பஞ்ச்சர் பாபு என்கிற ராமசாமின்னு எழுதறா மாதிரி கல்யாணப் பத்திரிகையிலும் எழுதி ஆகணுமே. பத்ரி நாராயணன் என்கிற பத்ரி மாதிரி, நாராயணிக்கு எழுத ஒண்ணும் இல்லையாம். கேட்டுட்டேன்.

பார் : ஏன்? காபி நாராயணி என்கிற நாராயணின்னு எழுதிடேன்.

பத்ரி : (சிரித்து) பொருத்தமா இருக்கும். காபி நாராயணியிலே என்ன பாட்டு உண்டுன்னு தெரியுமில்லே?

பார் : அடிக்கடி கச்சேரிக்குப் போற கர்ப்பிணியோட வயத்திலே இருக்கிற சிசுவே சொல்லுமே. மதுரை மணியோட ஸரஸ ஸாம தான பேத தண்ட சதுரா...

பத்ரி : என்ன அர்த்தம் சொல்லு.அதாவது, சாம, தான, பேத தண்டம் ஆகிய உபாயங்களை சமயம் அறிந்து உபயோகிக்கிறவர்னு அர்த்தம். அதிலே ஒண்ணை நாராயணிகிட்டே உபயோகிச்சேன். 'ஒல்டு ஏஜ் ஹோமுக்குத்தான் போவேன்'னு நீ அடம்பிடிக்கிறதாவும், காபி குடிக்காத விரதத்தை நாராயணி கைவிட்டா, எங்களோட சேர்ந்து இருக்க உன்னைச் சம்மதிக்க வைக்கிறதாவும் கரடி விட்டு சுமுகமா முடிச்சுட்டேன்.

பார் : சமையல் அறைன்னா நாராயணிக்கு அலர்ஜி. சமையல் அறைக்கே போக வேண்டாத ஹோம்னா எனக்கு அலர்ஜி. நிரவல் பண்ணிக் கச்சேரியை முடிச்சுட்டே. இங்கே வரட்டும், காபிமிலேர்ந்து ஆரம்பிச்சு அவளை வதாங்கி வரை கொண்டு போறேன்.

பத்ரி : எனக்குப் பிடிச்ச ரசவாங்கி வரை கொண்டு போம்மா! உனக்குப் புண்ணியமா இருக்கும். ●

## இன்டர்நெட்டில் அன்னை!

ஓர் ஆசிரமம் எவ்வாறு இருக்க வேண்டுமென முன்மாதிரியை 'புதுவை ஆசிரமத்'தின் மூலம் உலகுக்கு உணர்த்தியவர் ஸ்ரீ அன்னை. அவரைப் பற்றிய செய்திகள், அவரது போதனைகள், அவர் அறிமுகப்படுத்திய மலர் வழிபாட்டு முறைகள் ஆகியவற்றை உலகெங்கிலும் உள்ள இலட்சக்கணக்கான அன்பர்கள் பின்பற்றி வருகின்றனர். அவர்களை மேன்மேலும் ஆன்மிகப் பாதையில் வழி நடத்தும் பொருட்டு சென்னை மேற்கு மாம்பலம், ஆரிய கௌடா சாலையிலுள்ள 'ஸ்ரீ அரவிந்த அன்னை ஆசிரமம்' இணையதளம் ஒன்றைத் துவக்கியுள்ளது. அன்பர்கள் அதனை உபயோகித்துப் பயனடையலாம் :

website : sriaurobindomotherssociety.com

E-mail : themothersblessing@gmail.com









கோடைக் காலம் கடந்துவிட்டால் சென்னையில் கிரிக்கெட் மேட்ச் நடக்க துளிக்கூட வாய்ப்பே இல்லை. ஆனால், இந்திய - இங்கிலாந்து டெஸ்ட் போட்டியை நடத்த சென்னையைத் தேர்வு செய்ததன் மூலம் இந்த எண்ணம் அவசர அவசரமாக மாற்றப்பட்டிருக்கிறது. தீவிரவாதிகளால் இந்தியாவுக்கு நேர்ந்திருக்கும் சங்கடமான நேரத்தில், இந்திய மண்ணில் கிரிக்கெட் மேட்ச் நடக்க வேண்டுமென்றால் அதற்கு சென்னை மட்டுமே பொருத்தமான நகரமாகப் பார்க்கப்படுகிறது.

இந்தியாவில் கிரிக்கெட் வரலாறு கொண்ட சில நகரங்களில் சென்னையும் ஒன்று. 1933ல் இந்தியாவின் முதல் டெஸ்ட் போட்டி சென்னையில்தான் நடந்தது. இந்தியா தனது முதல் டெஸ்ட் வெற்றியைக் கொண்டாடியது இங்குதான். முதல் ரஞ்சி டிராஃபி ஆட்டம் சென்னையில்தான் ஆடப்பட்டது. 1986ஆம் ஆண்டு இந்தியாவுக்கும் ஆஸ்திரேலியாவுக்கும் நடந்த சென்னை டெஸ்ட் போட்டி டையில் முடிந்த விநோதம், அடுத்த ஆயிரம் ஆண்டுகள் வரைக்கும் பேசப்படும். முதல் டெஸ்டில் 16 விக்கெட்டுகள் எடுத்து ஹிர்வானி உலக சாதனை புரிந்ததும், ஒரு நாள் போட்டியில் அதிகபட்சமாக 194 ரன்கள் (சயித் அன்வர்) அடிக்கப்பட்டதும் இங்குதான்; சென்னை ரசிகர்கள் முன்னிலையில்தான்.

பெரும்பாலும் டிசம்பர் மாதத்தில் மும்பை, டெல்லி, கான்பூர் ஆகிய நகரங்களுக்குத்தான் டெஸ்ட் மேட்ச் ஒதுக்கப்படும். ஒருகாலத்தில் சென்னையில் பொங்கல் சமயத்தில் ஏராளமான (17) டெஸ்ட் மேட்சுகள் நடந்துள்ளன. ஆனால், கடந்த பத்து வருடங்களாக, காரணம் இல்லாமல் இந்தப் பாரம்பரியப் பழக்கத்தை விட்டொழித்துவிட்டார்கள்.

இந்திய வீரர்களைக் கொண்டாடுவதற்காக மட்டும் சென்னை ரசிகர்கள் மைதானத்துக்குள் நுழைவது கிடையாது.

1999ல் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே நடந்த டெஸ்ட் போட்டி

# சேப்பாக்கத்தில் துளிர்க்கும் கிரிக்கெட்

யைப் பார்த்த பலர், தங்கள் நகங்களைப் பறிகொடுத்தார்கள். 20-20 மேட்சுக்கு இணையாக விறுவிறுப்பாக அமைந்தது. ஒரு டெஸ்ட் மேட்சின் கடைசி இன்னிங்ஸில் டெண்டுல்கர் ஆடிய சிறந்த, உருப்படியான ஆட்டம் என்று இன்றைக்கும் அந்த மேட்சைத்தான் குறிப்பிடுவார்கள்.

அந்த ஆட்டத்தில் இந்தியா தோல்வி அடைந்தது. கொல்கத்தா ரசிகர்களுக்கு இந்த நிலை ஏற்பட்டிருந்தால், தக்காளிகளையும் அழுகின முட்டைகளையும் மைதானத்துக்குள் வீசி எறிந்திருப்பார்கள். காகிதக் குப்பைகளை எரியூட்டியிருப்பார்கள். ஆனால் நல்ல கிரிக்கெட்டை ரசிக்க வந்த சென்னை ரசிகர்கள், அன்றைய தினம் ரசித்தது பாகிஸ்தானின் திறமையான பந்துவீச்சையும் வெற்றி பெறுவதற்காக அவர்கள் நடத்திய கடுமையான போராட்டத்தையும். ஆட்டம் முடிந்தவுடன் சென்னை ரசிகர்கள் எழுந்து நின்று கைதட்டியது, பாகிஸ்தான் வீரர்களுக்கு நம்ப முடியாதிருந்தது. அவர்கள் நாட்டு ரசிகர்கள் ஒருபோதும் அவ்வளவு சுலபமாக மற்ற நாட்டினருக்குக் கரவொலி எழுப்ப மாட்டார்கள். சென்னை ரசிகர்களின் தாராள மனத்துக்கு பிரதி உபகாரமாக, பாகிஸ்தான் கேப்டன் இன்ஸமாம் வீரர்களை அழைத்துக்கொண்டு மைதானம் முழுக்க வலம் வந்து ரசிகர்களையும் சென்னையையும் கௌரவப்படுத்தினார்.

சென்னை, சேப்பாக்கத்தில் டெஸ்ட் போட்டி நடக்கும் ஐந்து நாட்களும் பெரு மழை, சிறுமழை எதுவும் இல்லாமல் விளையாட்டு மைதானம் ஒரு கொண்டாட்ட வெளியாக மாறினால் மட்டுமே, இந்திய கிரிக்கெட் தன் இயல்பு நிலைக்குத் திரும்பும். ●



# அழுகையின் அர்த்தம்

கடந்த பத்தாண்டு காலமாக சென்னைக்கு வரவே இல்லை. வரவே கூடாது என்றுதான் பிடிவாதமாக இருந்தேன். இப்போது வந்தே ஆக வேண்டியுள்ளது.

''என்னங்க... அத்தை போயிட்டாங்களாம்...'' என விம்மலோடு துயரச் செய்தியைத் தந்த செல்ஃபோனைத் தூக்கி வந்தாள் என் மனைவி தேவி. நான் கொஞ்சமும் எதிர்பார்க்காதது.

தேவி அப்படியே தரையில் உட்கார்ந்து அழ ஆரம்பித்து விட்டாள். குழந்தைகளும் விழித்துக்கொண்டு அலங்க மலங்க ஓடிவந்தனர்.

விடிந்ததும் ஆஃபீசுக்கு ஃபோன் போட்டு லீவு சொல்லிவிட்டு, ஃபிளைட் பிடித்து சென்னை வருவதற்குள் வீடு மரணக் களையோடு இருந்தது.

அம்மா சராசரியான பெண்ணல்ல. 'வால்காவிலிருந்து கங்கை வரை - நிஷா'வைப் போல கம்பீரமானவள். எனக்குத் தெரிஞ்சு அவள் அழுது நான் பார்த்ததே இல்லை. அப்பா செத்தப்போகூட அமைதியா கல்லு மாதிரி இருந்தாள். தெரு முனையில் என் தலை தெரிஞ்சதுமே, அண்ணியின் அழுகை ஓங்காரமானது. ''வாப்பா.. வந்துட்டியா? கடைசி வரைக்கும் வைராக்கியமா ஒரு வார்த்தைகூட பேசாம இருந்துட்டு... இப்ப இவங்க பேச முடியாதுன்னு தெரிஞ்சதும் வந்துட்டியா?'' இன்னும் புலம்பல் தொடர்ந்தது. நான் மாலையை அம்மாவின் பாதங்களில் போட்டேன். அம்மாவைச் சபித்தவர்களும், அம்மாவினால் காயம்பட்டவர்களும் கூட அங்கே அழுதுகொண்டிருந்தார்கள். மரணச் சூழ்நிலை அவரவர் வீட்டு மரணத்தை நினைவூட்டிவிடும் என்று எங்கோ படித்தது ஞாபகம் வந்தது.

''நேத்து கூடக் காலைல உன்னைப் பத்திக் கேட்டாங்க. சின்னவன் இந்த வருஷமாவது வருவானா?னு கேட்டுக்கிட்டிருந்தாங்க. சாயந்தரமா காப்பி குடிச்சுட்டுப் படுத்தாங்க. ராத்திரி சாப்பிட எழுப்பப் போனா அப்பத்தான் தெரிஞ்சது...'' என்று சொல்லி முடித்தான் அண்ணன்.

முகம் கழுவ புழக்கடைப் பக்கம் போனபோது அண்ணன் யாருக்கோ ஆறுதல் சொல்லிக் கொண்டிருக்க, அந்தப் பெண்ணின் முகம் தெரியவில்லை. நான் பாத்ரூமின் தகரக் கதவைத் திறக்கிற சப்தம் கேட்டு அந்தப் பெண் சட்டென்று திரும்பிப் பார்க்க, அவள் முகம் பார்த்து அதிர்ந்து போனேன். மனோகரி! மனோகரியா இது? கசங்கிய பட்டுத் துணியாய் நைந்து போன உடம்போடு... கோடாரிக் கொண்டையுடன்... நெஞ்சில் பாரம் வைத்தது போல் அடைத்தது.

'மனோ' என் அப்பாவோட அக்கா பொண்ணு. சின்ன வயசுல இருந்து இந்த வீட்டிலேயே வளர்ந்தவ. எனக்கு இவதான் பொண்டாட்டின்னு அப்பாவும், மத்தவங்களும் சொல்லிச் சொல்லி கனவுகளோட வலம் வந்தவ.

அப்பாவோட அக்காவுக்கு அப்பாவைத் தவிர உறவுன்னு யாருமில்ல. வாழா வெட்டியான அத்தையும், மனோகரியும், அம்மாவைப் பொறுத்தவரைக்கும் சம்பளமில்லாத வேலைக்காரிகள்தான். அம்மா கல்யாணப் பேச்சு எடுத்தப்போ 'நான்

கட்டினா மனோகரியத்தான் கட்டு வேன்'னு சொன்னேன். ஆனா அம்மா பிடிவாதமா மறுத்தாள். வாக்கு வாதமும் எனது பிடிவாத மும் நீடித்தன. 'அவ ளைக் கட்டக் கூடாது. மீறி னால்...' கண் எதிரே அம்மா கயிற்றைக் கட்டித் தூக்கு போடப் போய்விட்டாள். கேவலமான பாச பிளாக்மெயில். அம்மா ஜெயித்தாள். தனது தம்பி மகளான தேவியைக் கட்டி வெச் சாங்க. அந்த நேரம் பார்த்து மத்திய விவ சாயத் துறைல எனக்கு வேலையும் வந்தது. மொத்தமாக டெல்லிக்கு விரக்தியோடு வந்தேன். காத லித்த மனோகரியைப் பத்தி பல மாதங்கள் குற்ற உணர்வில் குமைந்தேன். ஒருமுறை அண்ணனைச் சந்தித்தபோது, அம்மா படுத்துன பாட்டுல மனோகரி யாரோடயோ ஓடிப்போய்ட்டான்னும், அவளைக் கூட்டிக்கிட்டுப் போனவன் ஏதோ விபத்துல சிக்கி போய்ச் சேர்ந்துட் டான்னும், திரும்பி அவ வீட்டுக்கு வந் தப்பக் கூட தெருவுலயே நிக்க வெச்சு அசிங்கமாப் பேசி கேவலப்படுத்தி அனுப் பிட்டாங்கன்னும் கேள்விப்பட்டேன்.



மனோவுக்கு இழைத்த நம்பிக்கைத் துரோகத்தைத் தீர்க்க முடியாமல் திரும்பிப் போனவன் இப்பத்தான் வந்திருக்கேன். இந்தப் பத்து வருஷத்துல எனக்குக் கொஞ் சங்கூட அம்மா மேல இருந்த கோபம் போகலை. இதுக்கெல்லாம் அடிப்படைக் காரணமா இருந்த மனோகரிதான் இப்ப அண்ணாவிடம் அழுதாள். அம்மாவோ வாசல்ல பிணமா... என்னைப் பார்த்த அதிர்ச்சியில் மனோகரி உறைந்து நிற்க, நான் அவள் கோலத்தைக் கண்டு கட்டுப் படுத்த முடியாமல் தேம்பி அழுதேன். 'என்னதான் அம்மா மேல கோபம்னாலும் தாய்ப்பாசம்னா சும்மாவா?' என்று ஊரும், உறவும் பேசிக் கொண்டிருக்க... மனோகரி யும் அழுது கொண்டிருக்கிறாள். நானும் அழுதுகொண்டிருக்கிறேன். எனக்கும் மனோகரிக்கும்தானே தெரியும், எங்கள் அழுகையின் உண்மையான அர்த்தம். ●

**-பிங்கார குருமாறவி**

# ஏட்டேமேஜை

**ந**ல்ல திரை இசை என்பது நல்ல கதையையும் அதை உருவாக்கும் இயக்குநரையும் சேர்ந்தது என்று பிரேம்ஜி அமரன் கூறியது நூற்றுக்கு நூறு உண்மை.

**- டி.கே.சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்.**

**ஆ**க்ஷன் டைரக்டரையே இண்டர்போல் போலீஸ் ஆடவைத்து விட்டதே?

**- துரைராஜ், ஓமாம்புலியூர்.**

'**ஹா**ஸ்பிடல் எத்திக்ஸ்' எவ்வளவு பயனுள்ள கட்டுரை! மருத்துவரின் பெயருக்குப் பின்னுள்ள எழுத்துக்கள் பிராக்கெட்டில் நாட்டுடன் இருத்தல் கல்வித் தகுதியன்று; ஒரு அடையாளம் என்றது, புதிய செய்தி பலருக்கும்.

**- எஸ். ஜானகி, உடுமலைப்பேட்டை.**

**த**மிழகக் குடும்பங்களில் அருகி வரும் குடத்தினைக் கொண்டு தஞ்சாவூர்க் கவிராயர் நெகிழவைத்து விட்டார்.

**- க. சுந்தர், நெய்வேலி.**

**கி**ரேசியின் பதில்களில் விவேகம், குறும்பு கொப்பளிக்கிறது. 'சதம்' அடிக்க வாழ்த்துக்கள்.

**- ம. ராஜேஸ்வரி, திருச்சி.**

**நீ**ங்கள் சென்னை பக்கமா? மதுரைப் பக்கமா? என்ற கேள்விக்கு 'அறிவாலயம் பக்கம்தான்' என்று அழகான - அறிவான



# டாக்குமெண்டரி பக்கங்கள்

**யு**த்த சத்தம் 'புத்த சரணச் சத்தத்தை' மீறி ஒலிக்கிறது. கோசின்ரா கவிதை நெஞ்சைக் கீறிய விதை.

**- எஸ். ஜானகி, உடுமலைப்பேட்டை.**

பதிலைக் கூறிய கனிமொழி 'தேர்ந்த அரசியல்வாதி'.

**- என்.எஸ். மணிமாறன், திருவண்ணாமலை.**

பத்தொன்பது வாரங்கள் ஒரு நல்ல டாக்குமெண்டரி படம் பார்ப்பது போன்று 'என்னை இயக்கிய ஹீரோக்கள்' பகுதிவாயி லாக இயக்குநர் 'சிம்புதேவன்' சுவைபட பகிர்ந்து கொண்டார். இன்னும் நிறைய அவர் சாதிக்க வாசகர் கள் சார்பில் 'வாழ்த்துக்கள்'.

**- ரேவதிப்ரியன், ஈரோடு-1.**



'ரகசிய தும்மல்' ஒரு பக்கக் கதை ரகசியமாகத் துள்ளலோடு ரசிக்க வைத்தது.

**- 'வானவில்' மூர்த்தி, கடலூர்.**

'தெனாவட்டு' பட விமர்சனம் படு கச்சிதம்! அதிலும் கதாநாயகி பூனம் பஜ்வா ஆபாசமில்லாத உடைகளில் அழ கழகாய் வந்து போவதுதான் படத்தில் உள்ள ஒரே ஆறுதல் என்று 'நச்' எனச் சொன்னது 'நறுக்'!

**- ஜி. பாண்டுரங்கன், போளூர்.**

தின இதழ்கள், தொலைக்காட்சி நீங்கலாக தீவிரவாதத் தாக்குதலுக்குள்ளான நம் வீரர்களுக்கான முதல் அஞ்சலி கல்கியுடையது.

**-எஸ். ஜானகி, உடுமலைப்பேட்டை.**

நியூஸ் பாயின் 'சினி சிப்ஸ்' செய்திகள் சூடாகவே உள்ளன!

**- இந்திரன், நாகர்கோவில்.**

நடிக்க வந்த மிஸ்டர் இந்தியா தன் நடிப்பின் மூலம் மிஸ்டர் நடிப்பு என்று பெயரெடுப்பாராக!

**- ராஜன், பெரம்பூர்.**

பயங்கரவாதம் என்பது எந்த ஒரு மதக் கோட்பாட்டினாலும் விளைந்து விடவில்லை என்ற தலையங்கச் செய்தி அமர்க்களப்படுத்தியது!

**- ஏ.பி.எஸ். ரவீந்திரன், வள்ளியூர்.**

**திரு. நீலகண்டன் குறிப்பிடும் பிணக்குண்டலம் சாமுண்டியின் செவிகளில் காணப்படுவது. சாமுண்டி இயமனின் மனைவி, தமிழ்நாட்டில் கிடைக்கும் காலத்தால் முற்பட்ட எழுவர் அன்னையர் சிற்பங்களுள் சாமுண்டியும் ஒன்று. சாமுண்டியின் செவிகளை அல்லது செவியை அலங்கரித்த இப்பிணக்குண்டலமே பின்னால் வந்த பிடாரி வடிவங்களிலும் (காளி) கொள்ளப்பட்டது.**

**- டாக்டர் இரா. கலைக்கோவன்,**
**இயக்குநர் டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்று மையம்,**
**திருச்சி.**



# கதவைத் தட்டிய

தூத்துக்குடியைப் பிறப்பிடமாகக் கொண்ட நண்பர் ஸ்டுவர்ட் கொறேரா, தலைசிறந்த ஜப்பானிய பன்னாட்டு நிறுவனமொன்றின் பொது மேலாளர்.

மும்பை தொழிலதிபர்களுடன் மிகப் பெரியதொரு ஒப்பந்தம் பற்றிப் பேசி முடிப்பதற்காக வந்திருந்தவர். பேச்சு வார்த்தைக்குப் பின் ஹோட்டலின் 14வது மாடியிலிருந்த தனது அறைக்குத் திரும்பினார் கொறேரா. அடுத்தநாள் காலை 9.30 மணி விமானத்தில் ஹைதராபாத் திரும்ப வேண்டும். உடை மாற்றிவிட்டு, சற்று நேரம் தொலைக்காட்சியைப் பார்த்துவிட்டு, படுக்க எண்ணுகையில் பட்டாக வெடிக்கும் சப்தம் கேட்கிறது. இந்த நேரத்தில்கூட மும்பைக்காரர்கள் பட்டாக வெடிக்கிறாங்களே எனும் எண்ணத்துடன் தூங்கிவிடுகிறார் கொறேரா. நிம்மதியாய் உறங்கிப்போன கொறேரா தங்கியிருந்த ஹோட்டல், அந்த நேரத்தில் பயங்கரவாதிகளின் தாக்குதலில் சிக்கி சீரழிந்து கொண்டிருந்த தாஜ்மஹால் பேலஸ்!

நன்றாகக் கண் அயர்ந்த வேளையில், காதில் சன்னமாய் ஒலிக்கும் கைபேசியின் அழைப்பில் சடுதியில் விழிக்கிறார் கொறேரா. கடிகாரம் 1.30 AM என்கிறது. பரபரப்புடனும், ஒரு விதத் துடிப்புடனும் அவரை விசாரிக்கும் ஹைதராபாத் சக ஊழிய நண்பர் கூறும் செய்தி அவர் நெஞ்சில் இடியாக இறங்குகிறது. வெளியில் தொடர்ந்து கேட்கின்ற வெடிச் சத்தங்களின் பயங்கரம். மரண பய கணங்களாகக் கடக்கத் தொடங்குகிறது நேரம். நண்பர்களின் தொடர் எஸ்.எம்.எஸ். செய்திகள் மட்டுமே துணையாயிருக்கின்றன. தன்னுடைய இயலாமைச் சோகத்தையும், மரணத்தின் பிடி தன்னை நெருக்குவதையும் தன் குடும்பத்தார் தெரிந்துகொண்டால் அவர்கள் பெரும் துயருக்குள்ளாவார்களே என எண்ணி அவர்களுடன் தொடர்பைத் தவிர்த்து விடுகிறார்.

உண்ண உணவேதுமின்றி, கொடிய கணங்களாக நேரம் செல்கிறது. தொடர்ந்து வெடிச்சத்தமும் ஒரு அமானுஷ்ய வெற்றிடத் தனிமையும், மின் தடையால் வெளிச்சமின்றி இருளடைந்து கிடந்த அந்த அறையினுள் ஒரு பய உணர்ச்சியைத் தர, தவியாய்த் தவித்து நிற்கின்றார் கொறேரா.

நேரம் மாலை 5.30 ஆகிறது. பக்கத்து அறை தட்டப்படும் ஓசை கேட்கிறது. அந்தப் பதினான்காவது தளத்தில் காலடி ஓசை தொடர்ந்து கேட்கிறது. இந்த நடமாட்டம் தீவிரவாதிகளின் தேடல்தான்

எனக் கருதும் கொறேராவின் இதயத் துடிப்பு ஒருகணம் நின்று போய்விடுகிறது. அடுத்த குறி தனது அறையாகத்தானிருக்கும் என பயத்துடன் நினைக்கையில் அவருடைய அறை தட்டப்படுகிறது. ''நாங்கள் இந்திய கமாண்டோக்கள். கதவைத் திறங்கள்'' என அவர்கள் அழைப்பது கேட்கிறது. பயத்தில் உறைந்துபோன நிலையிலும், தன் குடும்பத்தினர் மற்றும் நண்பர்களின் தொலைபேசி எண்களை ஒரு காகிதத்தில் எழுதி வைத்துவிட்டு, தன் நண்பர் ஒருவரின் தொலைபேசி எண்ணை உரக்கச் சொல்லி, கமாண்டோக்களிடம் அந்த நண்பர் மூலம் தன்னை அழைக்கச் சொல்கிறார்; அவர்கள் தீவிர

# மரணம்...

வாதிகளல்ல எனத் தெரிந்து கொள்ளும் முகமாக.

மேலும், படபடவென கதவு தட்டப்படுகிறது. நேரத்தை வீணாக்காமல் விரைந்து வெளியில் வருமாறு கோபத்துடன் பணிக்கப்படுகிறார். இறைவன் மேல் பாரத்தைப் போட்டுவிட்டு கதவைத் திறக்கிறார் கொறேரா. 30 - 35 இந்திய கமாண்டோக்கள் துப்பாக்கிகளுடன் நிற்கிறார்கள். கொறேராவின் அடையாள அட்டைகளைச் சரிபார்த்தபிறகு, அவரையும் அதே தளத்திலிருந்த மேலும் மூன்று அயல் நாட்டினரையும் காப்பாற்றி 15 மற்றும் 16ம் தளங்களுக்குச் சென்று மொத்தமாய் இருபது பேரைக் காப்பாற்றி படிக்கட்டுகள்

## ஒரு செல்ஃபோன் வாக்குமூலம்

வழியே கீழே அழைத்து வருகிறார்கள். சிதறிக் கிடக்கின்ற பலருடைய உடல்களை மனம் பதறத் தாண்டி, இரண்டாம் மாடிப் படிக்கட்டில் சிந்திக்கிடந்த ரத்தக் கடலையும் தாண்டி வருகின்றனர். கமாண்டோக்கள் இவர்களைப் பத்திரமாய் ஹோட்டலுக்கு வெளியே கொண்டு விட்டுவிட்டு, மீண்டும் தங்கள் பணிக்காக உள்ளே திரும்புகிறார்கள்.

தான் உயிர் பிழைத்தது இந்திய கமாண்டோ படை வீரர்களின் தீரமிக்க, தன்னலமற்ற தியாகத்தினாலேயே என நெஞ்சுருகக் கூறுகின்றார் கொறேரா.

அவர் மீட்கப்பட்ட சில மணி நேரத்துக்குள் அவரிடம் (நேரடியாக) தொலைபேசியில் தொடர்பு கொண்டு கேட்டறிந்த உண்மைச் சம்பவமும், வாக்குமூலமும் இது! அவர் வாயிலாகக் கேட்கையில் தாஜ்மஹால் ஹோட்டலில் பணி நிமித்தமாய் எத்தனையோ முறை தங்கி வந்திருக்கின்ற, என் நெஞ்சின் படபடப்பு அடங்க நீண்ட நேரம் பிடித்தது. மரணத்தின் கோரப்பிடியிலிருந்து அதி சுபமாய் தப்பிவந்துள்ள கொறேராவின் மனநிலை எப்படி இருந்திருக்கும்!

தீவிரவாதத்தை ஒழித்தழிக்க சபதம் ஏற்போம்!

**- தார்சி எஸ். பெர்னாண்டோ**





# கல்கி நடத்தும்

# ஜாலி எலக்ஷன்

கால்ல சக்கரம் கட்டியாச்சு!
கைகுலுக்கப் புறப்பட்டாச்சு...

* உங்கள் காலேஜ் 'ஹீரோ', 'ஹீரோயினை' செலக்ட் செய்து உலகமெல்லாம் 'கிளிக்' செய்யும் முயற்சி இது.
* காலையில் எலக்ஷன் - மதியம் எண்ணிக்கை - மாலையில் பாராட்டு. இது ஒரு ஜாலியான ஒன் டே எலக்ஷன் ...
* உங்க காலேஜிலே உங்க முன்னாலே, உங்க ஸ்டூடண்ட் லீடர் ஒத்துழைப்போடு...
* செலக்ட் ஆனவங்களுக்குப் பட்டம்! வோட்டு போட்டவங்களுக்குப் பரிசு!
* உங்க காலேஜுக்கு நாங்க வரணுமா?

'சட்'டுன்னு லெட்டர் எழுதி 'பட்'டுன்னு தட்டி விடுங்க.

தொடர்புக்கு,
ஆசிரியர், கல்கி, (ஜாலி எலக்ஷன்)
47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 032.

## ஜனவரி முதல்...
## சென்னை கல்லூரிகளில் துவங்கும்
## கல்கியின் ரவுண்ட் அப்...



# DR. KAMAKSHI MEMORIAL HOSPITAL



Dr. T.G. Govindarajan
President -Founder -
Medical Director

தமிழகத்தில் இதுவே முதல் முறை

## டாக்டர் காமாட்சி நினைவு மருத்துவமனை

## கேன்சர் இன்ஸ்டிடியூட் (WIA) – உடன்

இணைந்து பெருமையுடன் அறிமுகம் செய்துள்ளது

## தமிழ்நாட்டின் முதல் PET-CT



**Discovery VCT64 SLICE PET-CT SCAN**
**Installed at CANCER INSTITUTE (WIA)**
- Canal Bank Road Gandhi Nagar, Adyar
Chennai - 20
Cell : 93814 36899
93814 36896

10% Special Discount On Sunday for Master & Executive Health Check-up

## தமிழ் நாட்டில் முதல் PET CT Scan

**இந்தியாவில் 4, 5 இடங்களில் மட்டுமே உள்ள இந்த ஸ்கேனிங் கருவியின் சிறப்பம்சங்கள்:**

• கேன்சரை அறிகிறது. • கேன்சர் பரவியுள்ள மற்றும் முற்றியுள்ள நிலவரத்தை அறிகிறது. • கேன்சர் சிகிச்சைகான மருத்துவ திட்டமிடலுக்கு உதவுகிறது. • சிகிச்சைக்குபின் கேன்சர் மீண்டும் தோன்றுவதை அறிகிறது. • இதய தசைகளுக்கான இரத்த ஓட்டத்தை அறிகிறது. • மாரடைப்பு இதயத் தசைகளின் மீது ஏற்படுத்தியுள்ள தாக்கத்தின் விளைவுகளை அறிகிறது. • ஆஞ்சியோபிளாஸ்டி மற்றும் கரோனரி ஆர்டெரி பைபாஸ் சர்ஜரிகளின் மூலம் குணப்படுத்த இயலும் இதயத்தின் தசைப்பகுதிகளை அறிகிறது. (மையோ கார்டியல் பெரிஃபியூசன் ஸ்கேன் உதவியுடன்). • மனக்குழப்பம், நினைவிழத்தல், டியூமர் முதலான மூளையின் சீரற்ற தன்மையைக் கணிப்பதுடன் மத்திய நரம்புத் தொகுப்பில் உள்ள பாதிப்புகளையும் அறிகிறது. • நோயாளியின் மூளை மற்றும் இதயத்தின் செயல்பாடுகளை இயல்பான மனிதனோடு ஒப்பிட்டு பார்க்க உதவுகிறது.

## DR. KAMAKSHI MEMORIAL HOSPITAL - SPECIALITIES AT A GLANCE

• Intensive Care Unit Cardiology & Cardio Thoracic Surgery • Neurology & Neuro Surgery • Trauma Care & Orthopaedics • Obstetrics & Gynaecology • ENT Surgery • Dermato Cosmetology • Pulmonology • Dentistry and Oral & Maxillofacial Surgery • Paediatrics • Gastroenterology • Transplant Surgery • Oncology • Transfusion Medicine • Nephrology • Urology • Vascular Surgery

இலவச ஆலோசனைக்கு: எஸ்.சுபாஷிணி – 93451 20265, 93810 30712



#1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.
Tel : +91-44-22469200 (30 Lines), 66300300 (30 Lines), Fax : 22463282
E-mail : info@drkamakshimemorialhospital.org
Website : www.drkamakshimemorialhospital.org

